# 8. உலக வரலாறு

நம் கட்புலனாம் இவ்வுலகின் தோற்றம், வடிவு முதலியவற்றை ஆராய்ந்தறிந்த பேரறிவாளர்கள் மிகப்பலர் எனினும், அவருட்சிறந்துநின்றார் கொண்டது உலகு ஒரு உருண்டை வடிவாயபொருள் என்பது. அது, வடிவில் உருண்டையெனினும், எண்ணரியபருமனும், ஒளிதெறிக்கும் இயல்பும் பொருந்தி, அளப்பரிய ஆகாயமென்னு மளக்கரில் மிதக்கும் பல்வேறு வகைப்பட்ட பொருள்கள் செறிந்த ஒரு திப்பியப் பொருளாகும். இன்னும் அதனைக் கூர்ந்து நோக்கின், அது, ஒரு நாரத்தம் பழத்தையொத்து, மேலுங்கீழுந்தட்டையாய், இருமருங்கினும் அச்சுக்கள் நிறுத்த அவை உட்சென்று நடுவில் கூடுமென நினைத்தற்கு ஏதுவாய், அவ்வச்சின் வழியாகவே சுற்றுகிறது எனக் கருதுவதற்கும் இடனாயிருக்கிறது.

இவ்வாறு, இது சுற்றுவதனால், இதன் எப்பாகம் ஞாயிற்றின் முன் வருகிறதோ, அப்பாகம், அஞ்ஞாயிற்றின் ஒளி பெற்றுப் பகற் காலத்தைப் பெறுகிறது அக்காலை, மற்றைப் பாகத்திலிருள் பரவ இராக்காலம் நிகழும். நிற்க, இது பெறும் ஒளிக்குக் காரணமாயது ஞாயிறு என்பதென்னையெனின், அது ஒரு ஒளிநிறைந்த அழற்பிழம்பு என்பர். அதனிடத்திலிருந்தே இவ்வுலகு தோன்றிற்றெனவும் கூறுவர். வேர்க்கடலை, மொச்சை முதலியவற்றைத் தீயிலிடுங்கால், அவை வெப்பத்தால் வெடிப்ப, அவற்றினின்றும் விதைகள் மிகுந்த விரைவுடன். வெளிக்கிளம்பலொப்ப, அஞ்ஞாயிறென்னும் அழற்பிழம்பின் கண் வெடித்து விரைந்தெழுந்த பொருள்களுள் ஒன்று இது எனவும் கூறுவர். இன்னணம் ஞாயிற்றினின்றும் வெளிப் போந்த பொருளாம் இப்பூமிக்கும் இஞ்ஞாயிற்றுக்கும் ஒரு

கட்புலனாகாத் தொடர்புண்டு. அத்தொடர்பு ஒன்றையொன்று பற்றியே நிற்கும். விளங்கக்கூறின், ஞாயிறு பூமியைத் தன் மாட்டிழுத்தலும், அப்பூமி அதனை யிழுத்தலுமாய தொடர்பு. இதனை வடமொழியாளர் ஆகர்ஷண சக்தியென்பர். மேனாட்டார். Attraction of Gravitation (அட்ராக்ஷ னாவ் கிராவிடேஷன்) என்பர். அன்றியும், ஓர் யாண்டில் நிகழும் கார், கூதிர், முன்பனி, பின்பனி முதலாய பருவங்கள் தோன்றுதற்கும் அச்சுற்றே காரணமெனவும் கூறுவர்.

இக்கூறிய கொள்கையே பெரும்பாலார் கொண்ட தெனினும், இதற்கு முரணாயினாருமுளர். இதிற் சிறிது வழுவியாருமுளர் எனவுங் கொள்க. இவர்களுட் பண்டைய முனிவர்களும் ஒரு சாராராவர். இவர்க்குள், சிலர் இப்பூவுலகு ஒரு சமனானவெளி யென்றும், இதனைத் தாங்கும் பலதிண்ணிய தூண்கள் பல இதன்கீழே யுளவென்றுங் கூறுவர். சிலர் இதுவொரு பேரரவின் முடியிலிருக்கிறதென்றும், வேறுசிலர், ஒரு அடல்மிக்கயாமையாலிது சுமக்கப் பெறுகின்ற தெனவுங் கூறுவர். இவர்கள் கூறிய தூண், அரா, யாமை முதலியன நின்று தாங்கற்கு உரிய இடம் என்னெனக் கடாயினார்க்கு விடையிறுத் தலாகாமையின், அவை கொள்ளற்பாலனவல்ல வென்க.

பிராமணர்கள், விண்ணுலகு மண்ணுலகைச் சார்ந்து மேனிற்கிறதெனவும், இவற்றினிடையில் நீரிடைத்தவழும் மீனினம் போல், ஞாயிறும் திங்களும் வானிடை மிதந்து கிழக்கு மேற்காகச் சென்று. தத்தமக்குரிய காலத்திறுதியில் உலகு விளிம்பை (Horizon) யடைந்து, முடிவில் தத்தம் முறைப்படித் தோன்றுமிடத்தையடையுமெனவும் கூறுவர்.

நிற்க, புராணிகர்கள், இப்பூமியொரு தட்டைச் சமவெளி யென்றும், இதனைச் சுற்றிப் பாற்கடலைத்தலைக்கொண்ட எழுவகைக் கடல்களும், அவற்றினிடையில், மேருமுதலாக எழுவகை மலைகளுமிருக்கின்றன வென்றுங் கூறலோடமை யாது, சூரிய சந்திர கிரகணங்களாவன இராகுவென்னும் பேரரவு சிலகாலங்களிற்றோன்றி அவற்றுளொன்றை விழுங்குங் காலமே எனவுங் கூறுப.

அபுல்காசன்அலி யென்னும் பேரறிவாளரொருவர் தம் நாட்டு வல்லார் உரைகளைக் கற்றுத் தம் நுண்ணறிவிற்குத்

தோன்றிய சிலவற்றைத் தாம் எழுதியுள்ள "பொன்னிலமும் மணிச்சுரங்கமும்" (Mourondge-ed-dharab, or The golden meadows, and the mines of precious stones) என்னும் உலக வரலாற்றுட் கூறுமாறு:-

"இப்பூவுலகு ஒரு தனிப்பெரும் பறவையாகும். இதன் தலையே மெக்கா, மெதினா என்னும் நகரங்கள். பாரசீகமும் இந்தியாவும் அதன் வலச்சிறகாகவும், காக் (Gog) என்ற நாடு இடச்சிறகாகவும், ஆப்பிரிக்கா அதன் வாலாகவும் அமைந்துள்ளன. இன்றையப்போது நாம் வாழும் இப்பூவுலகின் முன்பு, வேறொரு உலகிருந்தது. அதுதோன்றி ஏழாயிரம் ஆண்டுகளே இருந்தது. அதனை இப்பூப்பறவையின் குஞ்செனினும் பொருந்தும். தோன்றியிருந்த அது, இடையில் நிகழ்ந்த வெள்ளம், நிலநடுக்கம் முதலாய இடையூறுகளால் இன்னல்வாய்ப் பட்டிறந்தொழிய இது தோன்றிற்று. இங்ஙனம், பூவுலகம் தோன்றியழிதல் இயற்கையே. அவற்றிற்குரிய காலம் எழுபதினாயிரம் ஹஸரோவம் ஆகும். ஒரு ஹஸரோவமென்பது பன்னீராயிர மாண்டுகளாம்..."

இக்காலக் குறிப்பும், வரையறையும் இவர் தம்மோடிருந்த பிராமண நண்பர்களொடு கலந்து செய்ததாதல் இந்நூலாற் றெரிகிறது.

இந்நூலாசிரியரைப் பற்றிய குறிப்புக்கள்:- இவரது தந்தை ஆல்கான்; அவர் தந்தை அலியென்பார்; அவர் தந்தை அப்துர் ரஹிமான்; அவர் தந்தை அப்துல்லா; அவர் தந்தை மசௌடல் அதெலி. இவரை யாவரும் மசௌடி யெனவே யழைப்பர். பிறகு இவரது அறிவைகுறித்து, இவர்க்குக் "குத்புதீன்" என்னும் பட்டமும் அக்காலத்தார் அளித்தனர். எனினும், இவர் அப்பட்டப் பெருமையையும் கருதாது லாஹேப் அர்ரசௌ (பரம்பொருளின் தூதனுடைய தோழன்) என்னு மொருதாழ்வான (அக்காலத்தார் கருத்து) பட்டத்தையே யேற்றனர்.

நூற்குறிப்பு:-

இது உலகின் தோற்ற முதல் இந்நூல் எழுதியகாலம் வரையிற் கூறும் வரலாறாகும். இவரது காலம் மோதிபில்லாவின் கிலாபத் காலம். அதாவது ஹிஜிரா 336.

இதுகாறும் கூறிய கொள்கைகளும் இன்னோரன்னபிறவும் பூவுலகைப் பொருத்தமட்டில் மிகப்பல உண்டு. ஒவ்வொரு கொள்கைக்கும் அதனையாய்ந்தறிந்த பெரியோர்கள், அவ்வக் காலத்துக்கேற்பப் பலசில காரணங்களும், கரிகளும் காட்டியே நின்றனர்.

இனி, ஞாயிறு முதலிய வானுலகப் பொருள்களைப் பற்றி அவர்கள் நினைத்தவற்றைப் பார்ப்போம்.

ஞாயிற்றின் பிறப்பு முதலியவற்றைக் கூறவந்த பேரறிஞர்களும் பலரே. அவர்கள் ஒவ்வொருவரும் காட்டிய சான்றுகள், அவரொத்த அறிஞர்களை மயக்குந் தன்மையவாய் நிற்ப, அவரவர் தத்தம்மாலியன்றவளவு பிறப்புக் கூறினர். அங்ஙனங் கூறினார் தொகையைத் தூக்கி நோக்குங்கால், அவர்கள் மூன்று வகையுளடங்குவர். ஒருவகையார் மிகப் பண்டைக் காலத்து அறிஞர்களாவார். அவர்கள், ஞாயிறு ஒரு அளத்தற்கரிய அழலாழி (Wheel of fire) யென்பர்; ஒரு சாரார், ஒரு பளிங்கொத்த வொளிதெறிக்கும் (Transparent) கண்ணாடி அல்லது உருண்டை வடிவிற்றாய பளிங்கு என்றனர்; மூன்றாம் பிரிவினர், கல்லும் இரும்பும் கலந்து, பேரழல்வாய்ப் பட்டுருகி, ஒளிகாலும் தன்மைவாய்ந்த ஓர் அரும்பெரும் பொருள் என்பர். இவருட் டலையாயவர், அனக்ஸாகொரஸ் (Anaxagorus) என்பார். அன்றியும், இவர் விண்மீன், திங்கள் முதலிய வானப் பொருள்களனைத்தும் மண்ணினின்றும் தெறித்தெழுந்த கற்களெனவும், அவை ஒவ்வொன்றிற்குமுள்ள வானிடைத் தொடர்பு (அல்லது தன்வயங்கோடல்) Attraction of gravity) வயப்பட்டு, விரைந்து சுற்றிச் செல்லும் இயல்புடைமையின் பயனாகத் தீக்கொண்டு ஒளியிடுகின்றனவென்றுங் கூறுவர்.

இவர் இத்தகைய ஆராய்ச்சி முடிவை உரோம (Rome) தேயத்துமக்களுக்கு வெளியிட்டகாலை, அவர்கள் இதனை யேற்றற்கு மறுத்ததோடமையாது, இவரையும் தம் நாட்டினின்றுந் துரத்திவிட்டாராதலின் இதனை நாம் நன்கு ஆய்தல் வேண்டிற்றில்லை. அன்றியும், பண்டைக் காலத்து உரோம தேயத்து மக்கள் தமக்கு ஏற்காதகொள்கை, எண்ணம் முதலியவற்றை ஒருவர் வெளியிடுவரேல் அதனை மறுக்கும்

வகையால் அவரை வெளிநாடுகளுக்குத் துரத்தி விடுதல் மரபெனவும் கொள்க.

நிற்க, வேறுசிலர், மண்ணினின்றும் அழற் பொருள்கள் பல மேலே கிளர்ந்து சென்று, நாளாவட்டத்தில் வானவெளியிற் றிரிந்து நிற்பத் தற்செயலாக அவை ஒன்று கூடி ஒரு பேரழற் பிழம்பாயின; அப்பிழம்பே இஞ்ஞாயிறு; அப்பொருட்களுட் சில (அவையும் எண்ணிறந்தனவே) ஒன்று கூடாது, தனித்தோ, தம்போன்ற சில கூடித் திரண்ட சிறு பிழம்புகளாகவோ விண்மீன்களெனத் திகழ்கின்றன; இவைகள், காலம் நீடித்த காலை, வேறு சில அழற்பொருள் தம்முழை வந்துசேர, ஒருங்கே ஒளிபெறுவதுமுண்டு என்று கூறுவர்.

சிலர், நம்கட்புலனாம் ஞாயிற்றின்முன் வேறோர் ஞாயிறு இருந்ததெனவும், அது ஒரு காலத்துத் தன் ஒளிமுழுதும் ஒழிந்துமறைய, ஒரு திங்கள்காறும் உலகம் ஒளியின்றியிருந்தது; அப்போழ்தே, இஞ்ஞாயிறு தோன்றிற்று எனவுங் கூறுவர். வேறுசிலர், ஞாயிறு என்பது ஓர்பெறலரும் சீருஞ்சிறப்பு மமைந்து, பேரழகுவாய்ந்த பேரகமெனவும், அங்கு மக்கள் சென்று வாழ்தலுங்கூடு மென்றும் கூறி, அப்பேரகத்தின் மீது ஒரு வகைத்தான ஒளி, வெப்பம், நீர் முதலியவும் வேறு பிறவும் கலந்த மேகபடலம் சூழவுளதென்றும், அப்படலத்தின் செயலே இப்பூவுலகுபெறும் ஞாயிற்றொளியெனவும் கூறுப. இவருட்டலையாயவர் ஹெர்ஸ்கேல் என்பவர்.

இம்முறையே, அவரவர் கூறியுள்ளவற்றைத் தேடிக் கொண்டே செல்வது விரிவுகாணுமாதலால், இதனை யிம்மட்டி னிறுத்தி, இனி, இந்நிலம், ஞாயிறு, திங்கள் விண்மீன் முதலியவை தத்தம்நிலையிற்றிரியாது கொட்புறும் தன்மையை யும், விரைவையும் பற்றியெழுந்த பெரியோர்களின் பலவேறு வகைப்பட்ட மதங்களையும் கூறி முடிவில் நம் நாட்டின் வரலாற்றையும் நோக்குவோம்.

ஞாயிற்றின் இயற்கையைப் பற்றிப் பல வேறு வகைப்பட்ட ஆசிரியர்கள் கூறியவற்றையும், அவற்றோரன்ன பிறவற்றையும் நாம் ஆராய்ந்து கொண்டே செல்லின், இத்தலைப் பொருள் முற்றுப் பெறல் அரிதாமாகலின், அவ்வாராய்ச்சியை

இம் மட்டினிறுத்தி, இக்கட்டுரைத் தொடக்கத்திற்கூறிய பூமியின் சுழற்சியைப் பற்றிச் சிறிது நோக்கிப்பின் அதன் வரலாற்றை யாராய்வோம்.

மேல் நாட்டில் பழங்காலத்தில் லெய்டென் (Leyden) என்னும் பல்கலைக் கழகமொன்றில், பேராசிரியராய் வான்புடிங் காப்ட் (Vonpuddingcoft) என்பாரொருவரிருந்தார், அவர் ஒரு பேராசிரியனுக்குள்ள அமைதிமுற்றும் நிரம்பப் பெற்றவ ரெனினும் தேர்தல் (Examination) காலங்கள் அறிந்து சோர்துயில் கொள்வார். அதனால், அவர் மாணவர்கள், கற்றற்றிறம் சிறிதும் களியாட்டயர்தல் பெரிதும் பயின்றுவிளங்கினர்.

ஒருநாள், இவர் மாணவர்க்கு நிலவுலகைப் பற்றிய ஓர் விரிவுரை நிகழ்த்துமமையத்து, வாளி (Tub or bucket) யொன்றிற்றண்ணீர் கொண்டு, ஏந்தியகையராய் அதனை நீட்டிய வண்ணம் நேரே பிடித்துச்சுற்றினர். சுற்றுங்கால் வாளியிலிருந்த நீர் கீழே வீழாது, அதனிடத்தேயே நின்றது. இதனை ஓர் காட்டாகக் கொண்டு, அவர் பின்வருமாறுதன் மாணவர்கட்குக் கூறுவாராயினர்.

"இவ்வாளியே பூமியாகவும், அதன் நீரே கடலாகவும் நீட்டிப் பிடித்த கையே பூமிக்கு ஞாயிற்றினுக்குமுள்ள தொடர்பாகவும், என் சென்னியே ஞாயிறாகவும் கொள்க. யான் வாளியைச் சுற்றுங்காலெழுந்த விரைவின் பயனாக, எங்ஙனம் அதன் கணிருந்த தண்ணீர் கீழே விழாது நின்றதோ அங்ஙனமே இப்பூவுலகு சுற்றும் நேர்மையால் அதன்கணுள்ள கடனீரும் இருந்த வண்ணமே நிற்கின்றது, என அறிக. யான் சுற்றும் நெறியினின்றும் உடனே நிறுத்தினாலும் அவ்வாளியே யாதானு மொன்றால் தடைபெற்றாலும் அதனீர் கைவழியே என் தலை மிசைவிழும். இது உண்மை. இங்ஙனமே, பூமியும் தன் விரைந்த சுழற்சியினின்றும் யாதானுமொன்றாற்றகையப் பெறின், கடனீரும், அதன் பயனாக ஞாயிற்றின் மீது விழும், வீழினும் ஞாயிற்றின் வெம்மையும், ஒளியின் மிகுதியும் எவ்வாற்றானுங் குறைபடா வென்பதைச் சிறிதும் மறவற்க. என்னை: ஞாயிற்றின் வெம்மைக்கு இம்மண் சூழ்ந்த கடனீர் ஆற்றாதாகலின் என்க."

இதனைக் கேட்ட மாணவர்களுளொருவன், தன் ஆசிரிய ருரைத்த பொருள் எத்துணையுறுதியுடைத்து, எனக்காண்டல் வேட்கை மீதூர்ந்து, வாளியைச் சுற்றி நின்ற. ஆசிரியரதுகையை இடைநின்று தடுத்தான். தடுக்கவே அவ்வாளி நீர் அவர் உடல் முழுதும் வீழ்ந்து நனைத்தது, வாளியும் கீழ்வீழ்ந்தழிவுற்றது. ஆசிரியர்க்கும் அடக்கலாகா வெகுளிபிறந்தது. முகங்குருதி பாய்ந்து செக்கர்ச்செவேரெனச் சிவந்தது. உடனே கண்கறுப்ப வீசை துடிப்ப, அவரது மடித்தவாயினின்றும், வெடித்த சொற்கள் பல வெளிவந்தன. கண்டார் மாணவர்கள். கண்டாரது கருத்தில் பேரச்சந்தோன்றி ஒரு புடைவருத்தினும், மறுபுடை, வாளி நீர் பாய்ந்தும், தங்கள் ஆசிரியர் முகம் தன்னொளி கெடாதிருந்தமை கண்டு, இன்னணமே கடனீர் வீழினும், ஞாயிற்றின்றன்மை திரியா தென்பது முண்மையே எனமனந்தேறிச் சென்றனர்.

இந்நிகழ்ச்சியில், மாணவரது அறியாமைக் குறும்பு ஒரு புடைத் தோற்றமாயினும், நாம் நுணுகிநோக்கி அறியக்கிடப்பன பலவுள. அவை உயர்ந்தோர் தம் உண்மையறிவானாராய்ந்து காணும் அரியபொருள்களை, இயற்கை நங்கையும் உடன் கொள்ளாது. அவை தாமே முதிர்ந்து வருந்துணையும் வேறாய் நிற்பளென்பதும்: இன்னோரன்ன அரிய பொருள்கள் அறிவுடையோர் மனக்கண்ணிற்றோன்றி, அவரான் வெளியிடப் பெறுங்கால், அவற்றையேற்கும் ஆற்றலில்லாப் பிறமக்கள் - இயற்கை நங்கையின் இளஞ்சிறாராய இம்மக்கள் - ஏற்காதொழிவதன்றி, அவற்றையும், வெளியிடுவோரையும் மிகப்பல இடையூற்றுக்குள்ளாக்கித் துன்புறுத்துவரென்பதும்; இதனாலெய்தும் குறை அவ் அறிஞர்களதோ, மற்று, அவர்கள் கண்ட பொருள்களதோவென்பார்க்கு அது அவ்விரண்டிடத்து மன்றாய் இயற்கையின் பாற்றாமெனக் கோடல் வேண்டு மென்பதும்; இவ்வியற்கை நங்கைதான், அவை வெளி வருங்கால், மக்கள் அவற்றை யெளிதிலறிந்து ஏற்காவண்ணம் மயக்குவதோடு அமையாது, அவ் அறிஞர்களுக்கு இன்ன விழைக்குமாறு அவர்களைத் தூண்டுதலும் செய்வாளென்பதும், இங்குக்கூறிய இரண்டு குணங்களின் வயப்பட்ட இவடன் மாயையே மேலே நிகழ்ந்த நிகழ்ச்சிக்கும் காரணமாமென்பதும்; தம் உடற்கும் வாளிக்கும் இடை நின்ற கையே ஞாயிறு பூமி முதலியவற்றின் இடை நிற்கும் தொடர்பென்றும், இத்தொடர்பே

உலகம்நின்று நிலவுவதற்கு இன்றியமையாப் பொருளென்று மவர் கூறியது உண்மையேயாம் என்பதும்; இதனை அவ்வாசிரியர் வெளியிடுதலுமியல்பே யென்பதும்; இடைநின்ற தொடர்பு தடைப்பட்டழியுங்காலத்துத் தன் மாட்டிழுக்கும் தன்மைத்தாய ஞாயிறு தன் தன்மை திரியாது நிற்குமென்பதும் இன்னோரன்ன பிறவுமாம்.

இக்கருத்து மெய்க்கருத்தேயென மேனாட்டுப் பெரும் புலவர்கள் அனைவரும் உடன்பட்டனர்; இன்றும் உடன்படு கின்றனர். அவர்கள் ''**நிலத்துக்கும் ஞாயிற்றினுக்குமுள்ள தொடர்பு ஓர் காலத்து அழியும்; அவ்வழிவால் நிலம் தன்னிலை பெயர்ந்து ஞாயிற்றின் கட் பட்டழியும்.**'' என்பதையே இன்னும் எதிர்நோக்கி நிற்கின்றனர். மற்று, அவர்தம் நோக்கத்திற்கு மாறாக, இம்மண்ணுலகு தன் தொடர்பை இழத்தலின்றித்தன் நிலைமை மாறாமையும் பெற்று விளங்குகிறது. இவ்வியற்கைப் புலவர்களுடைய கொள்கைகள் முற்றுப் பெறுநாள் எந்நாளோ! இது காரணமாக எழுந்த கொள்கைகளும் புலவர்களும் விண் மீன் தொகையினும் பலரே. என் செய்வர்! தாம் ஆய்ந்தறிந்த உண்மைப்படி உலகம் தன் தொடர்பு கெட்டாலன்றோ அவர்கள் மனம் அமைதிபெறும்! இன்றேல், இப்புலவர்களையும் இயற்கையையும் ஒன்றுவிக்கும் சந்தாம் தன்மையுடைய புலவர்களேனும் வரல் வேண்டும்; அவர்களும் வந்தாரிலர்!!

ஆகவே, தாம் கொண்ட உண்மைப்படி உலகம் நடை பெறாமைகண்ட அவர்கள் உலகநடைப்படித் தம் முண்மைகளைச் செலுத்தி நோக்கினர். அது கொண்டே மேற்போந்த பேராசிரியரும் ''பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள தொடர்பு கெடின், அவை அக்கேட்டிற்குக்காரணமாயவற்றைத் தொடராது, ஒன்றானொன்று அழிந்தொழியு மெனினும், இவ்வுலகம் ஞாயிற்றைச் சுற்றி வருதலென்பதுண்மை''யென ஆண்டுக்கூறாது கூறிப்பின்னரோரமயத்தி னன்கு விளக்கினர். அது முதற்கொண்டு, உலகம் பகலவனைச் சுற்றி வருகிற தென்பதும், அச்சுற்றுக்கும் ஞாயிற்றினுக்குமுள்ள தொடர்பும் நெறியும் சுற்றும் பொருளைச்சார்ந்தனவென்பதும் முடிந்த முடிவுகளாயின.

## உலகின் தோற்றம்

மேற்கூறியவாற்றான் மண், ஞாயிறு முதலிய உலகங்களின் பொதுவியல்புகண்ட அன்பர்கள் அவ்வற்றின் தோற்றத்தைக்காண அவாவுவரன்றே! அவ்வவாவும் அறிவின்பாலதேயாம். ஆயினும், உலகின்றோற்றத்தைக் காண்டல் செல்லும் நாம் முதற்கண் நம் தோற்றத்தை யறிவோமாவென்பது வினா. அவ் வினாவிற்குப் போதிய விடையளிக்கவல்ல முடிபுகள் இதுகாறும் கிடைத்தில கிடைப்பதுமரிதே. அற்றேல், நம் நாட்டுப்பண்டைய முனிவர்களும், பெரியோர்களும் கண்டாய்ந்தவை என்னாயவோ வெனின், அவை அவரவர்கள் கொண்டுசென்ற அறிவின்றிண் மைக்கேற்ப அமைந்துள்ளனவேயன்றி, எல்லாமக்களானும் கொள்ளப் பெறவில்லை. இன்னணமே பிறநாட்டார் கூறிய முடிபுகளும் அமைந்துள்ளன என்க. எனவே, இருதலையும் தூக்கி நோக்குங்கால் ஒரு வகை முடிவும் பெறுதல் அரிதாகின்றது. இத்தனையும் நோக்கியோ நம் நாவரையரும் ''வந்தவா றெங்ஙனே? போமாறேதோ? மாயமாம் பெருவாழ்வு'' எனத் திருவாய்மலர்ந்தது!

இங்ஙனம் நம் தோற்றமே மாயமெனின், நாம் நின்று நிலவும் உலகின் தோற்றமும் மாயமேயாம். ஆயினும், நம் நாட்டுப் பெரியோரது கொள்கையோடு பிறநாட்டுப் பெரியோர்களது கூற்றுக்களை நோக்கி மனத்தான் ஆராய்வோம்.



# 9. ஊழ்வினை

திருவள்ளுவர் வழங்கிய திருக்குறளைப் படிப்பதில் இந்நாளைய நன்மக்கட்குப் பேரீடுபாடு உண்டாகியிருக்கிறது. அரசியலறிஞர் முதல் பள்ளிச் சிறார்கள் ஈறாக அனைவரும் இந்நெறியில் ஒத்த கருத்துடையராக இருக்கின்றனர். உலகிற்கே நல்லறமுரைத்த வள்ளுவர்பால் மக்கட்கு நன்மதிப்பு உண்டாகியிருப்பது நல்வாழ்வுக்கு அறிகுறி. நினைவு, மொழி, செயல் என்ற மூன்று துறையிலும் உரிமை திகழ மக்கள் வாழ்ந்த காலம் திருவள்ளுவர் தோன்றித் திருக்குறள் வழங்கிய காலம்; அத்தகைய காலம் இப்போது வந்திருப்பதால், மக்கட்குத் திருவள்ளுவரிடத்தே இத்துணையீடுபாடு தோன்றிய தெனலாம்.

இதற்கு முன்னெல்லாம், நம் நாட்டில் கற்றோர் எனப்படுபவர் இந்நாட்டில் வாழ்ந்தார் என்றாலும் அவருடைய எண்ணங்களும் செயலும் பிற நாட்டவர் நல்கியனவாகவே இருந்தமையால் வேற்று நாட்டவராகவே விளங்கினர். குழவிப்பருவத்தே, தாய் தான் தந்த பாலொடு உடன் ஊட்டிய தமிழ் மொழியை இகழ்ந்தனர்; தமிழ் நினைவைக் கைவிட்டனர்; தமிழ் வாழ்வைத் துறந்தனர்; தமிழ் நடையைத் தாழ்த்தினர்; தமிழுடையைமாற்றினர்; தமிழ்க் கல்வியைத் தூற்றினர்; தமிழ்ப் பண்பாட்டைக் கைவிட்டுத் தமிழ் மக்கட்குரிய சான்றாண் மையைக் கைதூவி, காலஞ் சென்ற தேசியகவி பாரதியார் கூறுவதுபோல ''நாமமது தமிழரெனக் கொண்டு'' உயிர் வாழ்ந்தனர். ''தாய் நாட்டிலிருந்து கொண்டே வேறொரு பேய் நாட்டு மக்களாக நம்மை மாற்றி விட்டதே இந்த அந்நிய மொழிக் கல்வி'' யென அண்ணல் காந்தியடிகள் முதலிய சான்றோர் கழறிய சொற்கள் இன்னும் ஒலி மாறவில்லை.

இவ்வாறு உண்டாகிய மன மாசு இன்னும் நீங்கவில்லை; அடிமையுணர்வு அகலவில்லை; சென்ற இருநூறு ஆண்டுகளாக மெல்ல மெல்ல உடையைப்பற்றி, உடலைப்பற்றி, உதிரத்தைப்

பற்றி, உயிரைப் பற்றிப் பிணைத்துக் கொண்ட அடிமைப் பண்பு நீங்கி விடுமா? வந்தது போல இல்லாவிடினும் ஒளிவர நீங்கும் இருள் போல விரைய நீங்காதன்றோ? உரிமை வாழ்வுபெற்று இயலும் நாம் உள்ளத்தாலும் உரையாலும் செயலாலும் இன்னும் அந்த அடிமைப் பண்பு நீங்காதேயிருக்கின்றோம். அதனால் தூய உரிமைக் கண்கொண்டு எழுதப் பெற்ற திருவள்ளுவரை நாம் அடிமைக் கண்கொண்டு காண்கின்றோம். அதுதான் இப்போது நம்மால் செய்ய முடிகிறது.

இந்த வகையில் திருவள்ளுவர் வழங்கிய திருக்குறளில் பல பகுதிகள் தெளிவாய் விளங்கவில்லை. பல ஐயங்கள் உண்டா கின்றன. பல புதிய கருத்துகளைப் புகுத்திப் பார்க்கின்றோம். உண்மைக் கருத்துகள் சிலவற்றை உண்மைக்கு மாறாகக் கொள்கின்றோம். இவை யாவும் இயல்பாக உண்டானவை. உரிமை ஞாயிறு தோன்றுங்கால் இத்தகைய கலக்கங்கள் உண்டாவது இயல்பு.

திருவள்ளுவரது திருக்குறள் ஊழ் என்றொரு பகுதியைக் கொண்டுளது. அஃது அறத்துப்பாலின் இறுதியில் பொருட் பாலுக்கு முன்னர் இருக்கிறது. அதனை அங்கே கொணர்ந்து திருவள்ளுவர் வைப்பானேன், என்பது ஒரு கேள்வி. இது நெடுங்காலமாக நின்று நிலவும் பழமையான கேள்வி. திருவள்ளுவர் இதனைக் கூறியிருப்பாரா? ஊழையும் உப்பக்கம் காண்டல் கூடும் என அறிவுறுத்தும் திருவள்ளுவர், "ஊழிற் பெருவலியாவுள" என அதற்கும் பெருமை பேசும் இப் பகுதியைக் கூறுவாரா? என்பன போன்ற சில கேள்விகள் இப்போது புதியனவாய் எழுகின்றன. நெருப்பிற் புகை தோன்று வது போல நற்சொல் நற்செயல்களில் தீமை தோன்றுவதும், தீச்செயல்களில் நன்மை தோன்றுவதும் இயற்கையெனப் பகவற் கீதையில் வியாசர் கூறுவதுபோல் பழமையில் தீமையும் புதுமையில் நன்மையும் உண்டாகலாமாதலால் இப் புதுக் கேள்விகளால் நன்மையும் விளையும் என்ற உறுதியால் இவற்றை மேற்கொண்டு மதித்து ஆராய்வது அறிஞர்க்குக் கடன். அதுபற்றி இச் சிற்றாராய்ச்சி இங்கே செய்யப்படுகிறது. நல்லறிஞர்கள் ஆராய்ந்து நலங் கொள்வார்களாக.

திருவள்ளுவப் பெருமான் வழங்கிய திருக்குறளின் அடிப்படையான கருத்துகள் யாவையென முதற்கண்

காண்போம். நம் நாட்டு மக்கள் வாழ்வில், பேச்சில், செயலில் சில அடிப்படைக் கருத்துகள் உண்டு. இவற்றுள் சிறப்பாக மூன்றைக் காணலாம். அவை வினை, மறுபிறப்பு, மேலுலக கீழுலக வாழ்வு ஆகிய மூன்றுமாகும்.

''இருள்சேர் இருவினையுஞ் சேரா'' ''எனைப்பகை யுற்றாரும் உய்வர், வினைப்பகை வீயாது பின் சென்றடும்'' என்றும், ''எழு பிறப்பும் தீயவை தீண்டா'' ''எழுமை யெழுபிறப்பும் உள்ளுவர்,'' ''இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேமா'' என்றும், ''மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று,'' ''ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும் தான்புக்கழுந்தும் அளறு'' என்றும் வருவன இவ்வடிப்படைக் கருத்துகளை எடுத்தோதுகின்றன.

இம் மூன்றனுள் வினையே மறுப்பிறப்புக்கும் மேலுலக கீழுலக வாழ்வுக்கும் காரணம்; நல்வினை செய்தார் மறுபிறப்பில் மேலுலக வாழ்வு பெறுவர்; தீவினை செய்தார் மறுபிறப்பிற் கீழுலகடைந்து துன்புறுவர். நலந்தீங்கு கலந்த வினை செய்தார் பிறப்புகளை யெய்துவர். இக்கருத்துகளையும் நாம் இத் திருக்குறளிலேயே காணலாம். ஆகவே, வினையால் மறுபிறப்புற்று, மேலும், கீழும், நடுவுமாகிய உலக வாழ்வுகளில் பிறந்து உழலுவதை விடுத்து வினையின் நீங்கிப் பிறப்பறுத்து வீட்டுலகம் சென்று சேர்வதே வாழ்வின் குறிக்கோளாகும். வீட்டுலகத்தைத் திருவள்ளுவர் ''வானோர்க்கு உயர்ந்த உலகம்'' என்றும், ''வரன் என்னும் வைப்பு'' என்றும், ''இறைவன் அடி'' என்றும் கூறுகின்றார். மேலுலகத்தைப் . ''புத்தேளுலகம்'' ''தாமரைக்கண்ணான் உலகு'' ''மேலுலகம்'' என்று, சிறப்பித்துரைப்பர். இவற்றையெல்லாம் நோக்கினால் மேல் கீழ் நடு எனப்படும் மூவகை யுலகங்களின் வாழ்வு வினை காரணமாக உண்டாவன என்பது இனிது விளங்குகிறது.

இவ்வினையுணர்வும் மறுபிறப்புணர்வும் பிறவும் திருவள்ளுவரே படைத்து மொழிவன அல்ல. அவர்க்கு முன்னிருந்த சான்றோர்களே கூறியிருக்கின்றனர். ''வாழச்செய்த நல்வினையில்லது, ஆழுங்காலைப்புணை பிறிதில்லை'' (புறம்) யாம்செய் தொல்வினைக்கெவன் பேதுற்றனை'' (நற்) என வினையுணர்வும், ''சாதலஞ்சேன் அஞ்சுவல் சாவின் பிறப்புப்

பிறிதாகுவதாயின், மறக்கு வென்கொல் என்காதலன் எனவே'' (நற்) ''இம்மை மாறி மறுமையாயினும், நீயாகிய ரெங்கணவனை, யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே'' (குறுந்) ''இம்மை யுலகத்திசையொடும் விளங்கின மறுமை யுலகமும் மறுவின் றெய்துப'' (அகம்) என மறுபிறப்புணர்வும் ''வாராவுலகம் புகுதலொன்றெனப் படை தொட்டனனே குரிசில்'' (புறம்), ''தொய்யா வுலகத்து நுகர்ச்சியும் கூடும்'' (புறம்) என மேலுலக வுணர்வும் சங்கச் சான்றோர்களால் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். இவ்வாறே மிகப் பழைய தமிழ் நூலாகிய தொல்காப்பியத்தும் இம்மூவகையுணர்வும் குறிக்கப்பெறுகின்றன. வடநூல்களிலும் வேதங்கள் தவிர ஏனை எல்லா நூல்களிலும் இவை கூறப்படுகின்றன. உலகாயதம் ஒழிந்த ஏனையச் சமயங்கள் யாவும் இவற்றை மேற் கொண்டுள்ளன. ஆதி வைதிகம் ஒழிந்த இந்திய சமயங்கள் பலவற்றிற்கும் வினையுணர்வு அடிப்படை எனத் தெளிய உணர வேண்டும்.

வினை யென்பது யாது? மனம், வாய், உடம்பு என்ற கருவிகளின் இயக்கமும் இயக்கமில்லாமையும் வினையென்று கூறப்படும். நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் வினையாகும். உலகில் நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் பயன் உண்டு. இராசராசன் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டினான் என்றால் கட்டுதல் வினையும், பெரிய கோயில் செயப்படு பொருளுமாகும். அதனால் அவன் அடைந்த பயன் இன்பமாம். இப்படியே ஒவ்வொரு வினைக்கும் செயப்படு பொருளும் பயனும் உண்டு. தொடக்கத்தில் சமய நூல்கள், செய்கையை வினையென்றும், செயப்படுபொருளைக் கன்மம் என்றும் கூறின. ஒரு செயல் செயப்பட்டபோதேயன்றிச் செயப்படாத போதும் வினையெனவே நின்றதனால் பின்வந்த சமய அறிஞர்கள், செய்யப்படும்போதும் படாதபோதும் செயப்படுபொருள் உள்ளடங்கியிருப்பது கண்டு, செயலையும் செயப்படு பொருளையும் ஒருங்கு கூட்டி வினையெனவும், கன்மமெனவும், இன்பமும் துன்பமுமாகிய பயன்களை வினைப்பயன் என்றும், கன்ம பலன் என்றும் வழங்கினர்.

ஒருவினை செயப்படுங்கால் அதனால் விளையும் பயனும் உருவாகிறது. அவ்வினை செயப்பட்டதும் பயனும் உருவாகி

இன்பமோ, துன்பமோ நல்குகிறது. சில வினைகள் முடிந்தபின் சிறிது காலங்கழித்துப் பயனைத் தருகின்றன. இவையெல்லாம் நாம் உலகியல் வாழ்வில் நாளும் காணும் காட்சியாகும்.

இவ்வினைக் குறிப்பு வேதங்களில் காணப்படவில்லையென அவற்றை யாராய்ந்த அறிஞர் கூறுகின்றனர். ஆயினும், அவ்வேதங்களிற் குறிக்கப்படும் மந்திரங்களைப் பிழை சிறிதுமின்றி ஓதினால் கருதிய பயன் விளையுமெனப் பிற்காலவைதிகர்கள் கூறுவர். மந்திரங்களை வாயால் பிழை சிறிதுமின்றி ஓதுவதும் வினையே யென்பது நன்கு தெளிய வேண்டியதென்று. எனவே, தமிழ் நூன்முறைப்படி எல்லா நாட்டு எவ்வுயிரிடத்தும் வினையுணர்வு உண்டு என்பது தேற்றம்.

இனி மந்திரங்களை ஓதுங்கால் அவற்றின் பயன் அருவாய் உருவாகிறது. அம்மந்திரங்களை விதிப்படி யோதி முடித்தவழி, மந்திரப்பயன் உருவாகி ஓதுவோர் விரும்பிய பயனை நல்குகிறது. அருவாய் உருவாகும் மந்திரப்பயனை அதிருஷ்டம் என வட நூல்கள் ஓதுகின்றன. இவ்வேதங்களைத் தொடர்ந்து நிற்கும் சங்கிதைகள் இவ்வினையியல்பை வற்புறுத்தாவிடினும் நல்வினை செய்பவன் துறக்கவுலக இன்பமும், தீவினை செய்பவன் நிரயத் துன்பமும் பெறுவர் என்று இசைக்கின்றன. இதனால் வினையுண்டென்பதும் மறு பிறப்புண்டென்பதும் பிறவும் பிற்கால வைதிகர்களுக்கும் உடன்பாடானமை தெளிகின்றோம்.

செய்வினையின் முடிவில் நிற்கும் வினைப்பயன் உடனே வந்தெய்துவதும், காலங்கழித்து வந்தெய்துவதும் உண்டெனக் கண்டோம். வினை முடிவில் எய்தக்கூடிய பயன், வினை முடிந்த சிறிது காலத்திற்குப் பின்னர் வந்து எய்துவானேன்? ஏன் உடனே எய்துவதில்லை? என்பன முதலிய ஐயங்கள் எழுதுவதற்கு இடமுண்டு. வினை நிகழுங்கால் அருவாய் உடன் பிறக்கும் அதிருஷ்டம், தனக்குரிய பயனை விளைவித்தற்குரிய பக்குவம் எய்த வேண்டியிருக்கிறது. வினையைச் செய்தவர், அதற்குரிய பயனை நுகர்தற்குரிய காலம் வரும்வரையில், அதிருஷ்டம் பக்குவம் பெற்றுக் கொண்டு வரும். பக்குவமானவுடன் தன் பயனை அந்த அதிருஷ்டம் நுகர்வித்து விடும். செய்வினையின் பயனைச் செய்தவர் பெறுதற்குரிய அதிருஷ்டம் பக்குவப்படு

வதைச் சார்ந்திருக்கிறது. அதிருஷ்டமும் செயப்படு பொருள் போல வினையிடத்தே தோன்றுவதால் தமிழ் நூலார் கூறும் வினைக்கண் அடங்கிநிற்கும்.

ஒருவினை (அதிருஷ்டம்) பக்குவப்படுவதற்குள் வேறுபல வினைகள் வந்து சேர்ந்துவிடும். இவற்றில் பக்குவப்பட்டவை இப்பிறப்பிலேயே பயனை நல்கும். எஞ்சியவற்றை நுகர்வது குறித்து மறுபிறப்பு வந்து சேர்கிறது. வினைப்பயன்களின் கூறுபாட்டிற்கேற்ப மறுபிறப்பில் புல் முதல் தெய்வமீறாகப் பல்வகையுடம்புகள் தோன்றுகின்றன. இதனால் எடுக்கும் பிறப்புகளும் பலவாகின்றன.

பிறவிதோறும் எடுக்கும் உடம்பு கருவியாகக் கொண்டே வினைப் பயன்களை நுகரவேண்டும். நுகருந் திறம் உடம்பு தோறும் வேறுபடும். அதற்கேற்பச் சில பயிற்சிகள் உண்டாகிக் குணம் போல ஒன்றிவிடும். அவையே அவ்வுடம்புகருவியாக வினைப்பயன் நுகர்வதற்கு வாயிலாய்ச் செயற்படுகின்றன. இவற்றை **வாதனை** என்பர். தமிழ் நூல்கள் வாதனையை அவா என்று குறிக்கும். பக்குவமெய்தி நிற்கும் வினைப்பயன் வாதனையின் வாயிலாக உயிரை வந்து அடைகிறது. வினைகள் பக்குவப்படுவதற்குரிய காலமும் பயன்களின் அளவும் அவ்வினைகளின் வன்மைகளைச் சார்ந்திருக்கின்றன. சில வினைகள் பக்குவமுற்றுப் பயன் நல்குங்கால் வேறான சில வினைகளும் பக்குவமெய்தி நிற்கலாம். அற்றுள் வலியதனால், மெலியது பக்குவமெய்திருப்பினும் பற்றுக்கோடாகிய வாதனை யில்லாமையால் கெட்டழியும். சீவன் முத்தன் ஒருவன், தன் உடம்பளவாய் நிற்கும் வாதனையைப் (அவாவை) பற்றி வந்து அடையும் வினைப்பயனை நுகரும்போது, பக்குவ மெய்தியிருக்கும் ஏனை வினைகட்குப் பற்றுக்கோடாகாதபடி வாதனைகளைத் தன் பால் நிலையா வண்ணம் அறுத்து விடுகின்றான். அதனால் அவன் வினைத் தொடர்புகளின் நீங்கி வீடுபெறும் திறம் பெறுகின்றான்.

நம் நாட்டு அறிவு நெறிச் சமயங்கள் பலவும் இறைவன் உலகம் உயிர் என்ற மூன்று பொருள்களையும் கண்டிருந்தன. கடவுள் என்பதொன்றுண்டு என்பதைத் தொடக்கத்தில் வற்புறுத்தாத நையாயிகரும் சாங்கியரும் பின்னர் அதனை

யுணர்ந்து மேற்கொண்டனர். பிரமப் பொருள் ஒன்றேயுளது; ஏனை உலகம் உயிர் என்பன பொய்யென்று கொண்ட பிரம வாதிகளும், விவக்ார மென ஒரு நிலை வகுத்து அதன்கண் இம்மூன்றும் உண்டெனக் கொண்டு சமயப்பணி புரிந்தனர். இம்மூன்றனுள் இறைவன் உயிர் என்ற இரண்டும் அறிவுடைப் பொருள் என்றும் பிறவெல்லாம் அறிவில்லாதவையென்றும் கூறுவர். வினையும், வினைப்பயனும் வாதனையும் ஆகிய யாவும் அறிவில்லாதவை.

அறிவில்லாத வினைப்பயன் அறிவில்லாதவாதனையைப் பற்றுக் கோடாகக் கொள்வதும், இன்பமும், துன்பமுமாகிய வினைப்பயன்களை உயிர்கட்கு நல்குவதும் கூடா. அறிவுடைய உயிரை அறிவில்லாத வினைப்பயன்கள் வந்து எய்துவதற்கு அறிவுடைய இறைவன் வேண்டப்படுகின்றான். அவன் உலகைப்படைத்து அவரவர் செய்த வினைப் பயன்களை அவரவரோடு கூட்டி நுகரச்செய்வதும் அந்த இறைவன் வேலை என்று கண்டனர். அது பற்றியே தொல்காப்பியரும் கடவுளைப் ''பால்வரை தெய்வம்'' என்றார். உலகுயிர்களைக் கடந்து நிற்கும் நிலையில் இறைவனைக் ''கடவுள்'' என்றும், அவற்றோடு தொடர்புற்று நிற்கும் நிலையில் ''தெய்வம்'' என்றும் தொல்காப்பியரை யுள்ளிட்ட தமிழ் நூலார் கூறினர்.

இனி வடநூலாருள் யோக சமயத்தார் இவ்வினைகளைச் சுக்கில கன்மம், கிருஷ்ண கன்மம், சுக்கில கிருஷ்ண கன்மம், அசுக்கில கிருஷ்ண கன்மம் என நால்வகைப்படுத்திக் கூறுவர். சுக்கில கன்மம் நல்வினை; கிருஷ்ண கன்மம் தீவினை; இரண்டுமிலாத வினை அசுக்கில கிருஷ்ண கன்மம். இறுதியிற் கூறிய அசுக்கில கிருஷ்ண கன்மத்தையே செய்பவன் வீடு பெறுபவன் என்பதும் அவன் அது செய்வதால் அவனுடைய புத்தி தத்துவத்திற்கிடந்து அவனையடைவதற்குப் பக்குவ முற்றுவரும் முன்னைவினைகள் (அவாவென்று தமிழில் கூறப்படும்) வாதனையாகிய பற்றுக்கோடு இல்லாமையால் கெட்டுப்போம் என்பதும் யோகநூலார் கொள்கை.*

* வியாசபாடியமும் தத்துவ வைசாரதியும் IV-17

ஒரு மனிதனுடைய நினைவு, சொல், செயல்களால் கன்மமென்னும் நுண்ணிய பொருள் உண்டாகிறது. அவனுடைய விருப்பு வெறுப்புகள் பசைபோல் ஊறி அக்கன்மத்தைத் தன்பால் ஈர்த்துக்கொண்டு சீவ பதார்த்தத்தில் ஒட்டிக்கொள்ளும். இவ்வாறு, பல பிறவிகளிலும் ஈட்டப்படும் கன்மம் சீவனைச் சூழ்ந்துகொண்டு கன்ம சரீரமாகிறது. பிறப்பு மாறுங்கால் சீவன் கன்ம சரீரத்தோடே நீங்கும் இன்ப துன்பங்களை ஒப்ப நோக்கி நுகரும் மேலோர்க்கு அக்கன்மம் முதிர்ந்து உதிர்ந்தொழியும்; அல்லாதவர்பால் அக்கன்மம் பெருகி வெண்மை கருமை முதலிய "இலேசியம்" பெறும். ஐவகைச் சீலங்களிலும் சிறிதும் பிழையின்றி யொழுகும் சான்றோர் புதிய கன்மங்களைச் செய்யாமையால் முன்னைக் கன்ம பலங்கள் முற்றும் நுகர்ந்து கழிந்தபின் உடம்பின் நீங்கி உலகத்து உச்சியில் வாழும் வீடுபெற்று முத்தர்களோடு கூடி இன்புறுவர் என்று சமண நூல்கள் கூறுகின்றன. புத்த சமயம் ஆன்மா உண்டென்பதை மேற்கொள்ளா தொழியினும் வினையும், மறுபிறப்பும் பிறவும் மேற்கொண்டொழுகுகிறது. யோகர்கள் போலப் புத்தர்களும் வினையை நலம் பயப்பன, தீங்கு பயப்பன, இரண்டும் பயவாதன என நால்வகைப்படுத்து இறுதியிற் கூறிய வினைவகையால் ஏனை வினைகளெல்லாம் கெடும் என்பர்* வினைகட்கெல்லாம் இச்சையே காரணம். இச்சையை நீக்கியவன், அறியாமை வெறுப்பு ஆசை முதலியவற்றைக் கெடுத்துப் பிறப்பறவுயரும் பெரியோனாவன். அவன் முன்னை வினைப்பயன்களை மட்டில் இப்பிறப்பில் நுகர்வான். அவன் வினைத் தொடர்பால் கீழ்நிலை எய்தான். அவன் அருக பதம் பெற்ற பரமேட்டி எனவுரைக்கின்றனர்.

இவ்வண்ணம் நம் நாட்டில் தோன்றிய சமயங்கள் பலவும் வினையும் மறுபிறப்பும் பிறவும் மேற்கொண்டுள்ளனவாயினும் உலோகாயதம் ஒன்றுதான் இவற்றைக் கொள்ளவில்லை. உலகாயதருள்ளும் சுசிட்சித சாருவாகர் என்போர் ஆன்மா என ஒன்று உண்டெனக்கொண்டு அதுவும் இறக்குங்கால் உடம்போடே அழிந்துவிடுகிற தென்பர். ஆசீவகருள் வினையும் மறு பிறப்பும் பிறவுமாகிய கொள்கைகளை ஏற்பதிலர்.

---

* அத்த சாலினி பக். 89.

இவர்களை அஜிதகேச கம்பளர் என்பர். ஆசிரியர் திருவள்ளுவர் வினையும் மறுபிறப்பும் பிறவும் மேற்கொண்டொழுகும் கொள்கையினர் என்பதை முன்பே கண்டோம்.

ஒருவருடைய நினைவு, சொல், செயல்களாகத் தோன்றும். வினைப்பயன் பழுத்து நிற்கும் நிலையில் ஊழ்வினை என்று கூறப்படுகிறது. ஊழ்த்தல் என்பது "இணர் ஊழ்த்தும் நாறாமலர் அனையர்" என்றும் "தீஞ்சுளைப் பலவின்பழம் ஊழ்க்கும்மே" (புறம்) என்றும் சான்றோர் வழங்குவதால் ஒரு வினைச் சொல்லாதலைக் காண்கிறோம். இதன் பொருள் பயனுண்டாக முதிர்தல் என்பதும் அறிகின்றோம். மலர்ந்து மணமாகிய பயன் நல்கும் பூ, ஊழ்முகை (நற். 115) என்றும், கனிந்து பயன்படும் பழத்தை ஊழுறுபழம் (அகம். 117) என்றும் சான்றோர் வழங்குகின்றனர். இதனால் ஊழ்வினை யென்பது முதிர்ந்து பயன் நல்கும் வினை என்று பொருள்படுமாறு இனிது விளங்குகிறது.

பழுத்த பழம் மரத்தில் நில்லாது என்பது உலகுரை. நன்கு முதிர்ந்த கனி தன்பால் முதிரும் விதையாகிய பயனை எவ்வண்ணமேனும் அதன் முதலிலிருந்து நீக்கி அப்புறப் படுத்திவிடுமேயன்றித் தன்னிடமே கொண்டொழியாது என்பது கருத்தாம். மரம் ஒன்று பழம் ஊழ்த்தல் விதை பயந்து தன் இனம் பெருக்கும் குறிப்பிற்றாதல்போல் வினை ஊழ்த்தல் தன்பயனைத் தன்னைச் செய்தோர்க்கு நல்கி மேலும் வினைகளாகிய தன் இனத்தைப் பெருக்கும் இயல்பிற்றாம். பழுத்த பழம் விதைப்பயனை வெளிப்படுத்தாது ஒழியாமை போல ஊழ்வினையும் தன் பயனை ஊட்டாது கழியாது என்பது விளங்குகிறது. ஊழ்கனிக்கு அஃது இயற்கையமறமாதல்போல ஊழ்வினைக்குப் பயன் நல்குதல் இயற்கையறமாம். இயற்கையறம் எல்லா ஆற்றலினும் வலிமிக்கதாதலால் ஊழ்வினையின் வலிமிகப் பெரிது என்பதுபற்றி ஆசிரியர் 'ஊழிற் பெருவலி யாவுள' என்று அதன் வலிமிகுதியை விளக்குகின்றார்.

பழுத்து வரும் பழம் இடையே மாறுபட்ட பொருள்களால் வெம்பிப் பயன் ஊழ்க்காது போதலும் உண்டு. அதுவும் இயற்கை நிகழ்ச்சி. அதனால் ஊழ்த்துவரும் வினையும் பயன் நல்காது கெடுதற்கு வாய்ப்புண்டு என்பது பெறப்படும். கனி வகைகள்

பலவும் பெரும்பாலும் ஊழ்த்துப் பயன்படுதலும் மிகச் சிலவே இடையிற் கெடுதலும் இயல்பு. அதுபோல ஊழ்வினையுள் ஒரு சில மாறுபட்ட வினைகளால் பயன் ஊழ்க்காது கெடுதற்கு இடமுண்டு என்று சான்றோர் கண்டனர். அதனை ஆராய்ந்தவர், உலையா முயற்சியால் ஊழ்வினையும் பயன் ஊழ்க்காது கெடும் என்று தெளிந்து, "ஊழையும் உப்பக்கம் காண்பர்" என்றனர். ஊழையும் ஊழ்க்காது கெடும் என அதன் வினையால் கூறாமல், ஊழையும் ஊழ்க்காவாறு இடையூறு செய்வர் என்பது தோன்ற, உப்பக்கம் காண்பர் என்று ஆசிரியர் கூறுவது நினைவு கூரத்தக்கது. பள்ளம் நோக்கி ஓடுவதை இயற்கை யறமாகக் கொண்டதண்ணீரும் இடை நிகழ்த்தும் தடையால், நின்று வற்றுதல்போல் ஊழ்வினையும் இடை நிகழ்த்தும் முயற்சிகளால் நின்று வற்றுவது இயல்பாதலின், ஊழை உப்பக்கம் காண்பது உயிர்கட்கு இயல்வதொன்றாயிற்று. ஆகவே, ஊழ்வினை தனக்குரிய பயனை ஊழ்த்தும் நல்குவதில் பெருவலி இயற்கை யறமாக வுடையதென்பதும், எனினும், மாறுபட்ட வினையால் அவ்வலி தடையுற்று நின்று வற்றும் என்பதும் முடிவாயின. இது பற்றியே,

'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.'

என்ற திருக்குறளும் தோன்றுவதாயிற்று. சான்றோரும் வினை பெருவலியுடையதாயினும், வெல்லத்தக்கது; கெடுத்தற்குரியது என்றெல்லாம் பேசுவராயினர்.

(அருந்தமிழ் உரைவளங்கண்ட பெருந்தமிழ்ப் பேராசிரியர் ஔவை அவர்கள் இற்றைக்கு முப்பது ஆண்டுகட்கு முன்னர் பன்னெறிச் சமயப் பனுவல்களில் தோய்ந்த நிலையில், மணிமேகலைக்கு உரைகண்ட திளைப்பில் திகழ்ந்தபோது இக் கட்டுரை எழுதினார். 1954-ஆம் ஆண்டு மயிலம் திருப்பெருந்திரு சிவஞான பாலய சுவாமிகள் மணி விழா மலரில் வெளிவந்த இக் கட்டுரையைப் பேராசிரியரது நான்காம் ஆண்டு நினைவாக வெளியிட்டுப் புகழ் வணக்கம் செலுத்துகின்றோம்.)

★

# 10. சங்ககாலத் தமிழ்மகன்

**ப**ண்டைநாளில் வாழ்ந்த தமிழ்மகன் என்னாது சங்ககாலத் தமிழ்மகன் என்றே தலைப்பு அமைகிறது. பண்டைக்காலம் என்பது ஒரு காலவெல்லைக்குள் அடங்காது பரந்த பண்பினதாய் இருக்கிறது. சங்ககாலம் என்ற வழி, முற்காலத்தே நம் செந்தமிழ்நாட்டில் சங்கம் இருந்து தமிழ்த் தொண்டாற்றித் தனிப்பெருஞ் சிறப்பெய்தியிருந்த காலம் என்ற உணர்வு நம் உள்ளத்தில் எழக் காண்கின்றோம். ஆயினும் இச் சங்ககாலம், இத்துணை ஆண்டுகட்கு உட்பட்ட காலம், மேற்பட்ட காலம் என எண்ணிட்டுக் காண முடியாத நிலையில் உள்ளது. சங்கத்தின் உண்மையையே ஐயுறுவோரும், ஐயுற்றுச் சங்கமென்பதே இருந்ததில்லையென்போரும், உண்டென்போரும், கிறிஸ்து பிறப்பதற்கு முன்னென்போரும் பின்என்போரும் எனப் பல திறத்தராய் ஆராய்ச்சியாளர் உளர். மற்று, நம் செந்தமிழ் மொழிக்கண் பழைய நூல்கள் பல சங்க இலக்கியங்கள் என்ற பெயரால் வழங்கி வருகின்றன. அவ்விலக்கியங்கள் தோன்றி நிலவிய காலமே சங்க காலமாம் என்ற பொது எல்லையை ஈண்டுக் கால வெல்லையாகக் கொள்கின்றேன். அவ்விலக்கியங்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு என மூவகையாய் இயலுகின்றன. இவை எழுந்து வளர்ந்த சிறந்த காலம், சங்க காலம் இன்றேல், இவை சங்க இலக்கியம் எனப்படா.

பத்துப்பாட்டு என்பது ஒரு தொகை நூல். இதன்கண் திருமுருகாற்றுப்படை முதலாகக் கூத்தராற்றுப்படை ஈறாகப் பத்துப் பெரும்பாட்டுக்கள் உள்ளன. இவற்றுள் இயற்கையின் இனிய காட்சி இனிது காட்டப்பெறுகிறது. அக்காட்சியைக் காட்டும் கட்டுரைகள் இலக்கணவரம்பு கடவாது, உள்ளம் கொள்ளத்தக்க அளவில் நின்று இன்பம் சுரப்பிக்கும் திறம் எண்ணுந்தோறும் நமக்கு இறும்பூது தருகின்றது. இதனால்

கல்வியின் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றார்கள். தமிழ்மன்னன் ஒருவன் தன் கோல் நிழலில் மக்களை நோக்கி,

"உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம்திரியும்;
ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாதுஅவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்."

என்று வற்புறுத்துகின்றான். ஒரு பெரியவர், வாழ்நாள் மிகுதியாகிய வழியும், தமக்கு நரையோ திரையோ உண்டாகாமல் இருந்தார். அது கண்ட அறிஞர் சிலர் அவரை நோக்கி, இதற்குக் காரணம் என்னை என வினவினர். அவர்கட்கு அவர், ''என் மனைவி, மக்கள் முதல் அனைவரும் என் கருத்திற்கேற்ப ஒழுகும் இயல்புடையவர். வேந்தனும் அல்லவை செய்வதிலன். சான்றோர் பலர் யான் வாழும் ஊரே'' என்றார். எனவே, சான்றோர் இனத்தனாய், கல்வியறிவு சிறந்து நிற்பது தனக்கு இன்றியமையாதது என்பதைச் சங்ககாலத் தமிழ்மகன் இனிதறிந்து ஒழுகிய திறம் நாம் காண்கின்றோம்.

சங்ககாலத் தமிழ்மகன், தன் வாழ்வில், உடல் வளர்ச்சி கருதா உயிர் வளர்ச்சியொன்றே கருதி, கல்வி பயின்று அறிவுபெற ஆர்வம் கொண்டான் என்பவர் அவனது இயல்பை அறியாதவராவர். உடல் உரம்பெறுவதற்கேற்ற ஆள்வினைக்கண் அவனது உள்ளம் அழுந்திப் பயிற்சி பெற்றிருந்தது. வாளேந்திப் போருடற்றிச் செய்வன செய்தல் தன் கடன் என்பதை அவன், தாயால் இளமையிலேயே வற்புறுத்தப் பெறுகின்றான். நீரில் நீந்துதல், யானை குதிரை முதலிய இவர்ந்து செல்லுதல், வாட்பயிற்சி, விற்பயிற்சி முதலியன பயின்றிருந்தான். இதனை நன்குணர்ந்த கம்பனும், இராமன் வாயில் வைத்து, ''மதிதரு தனயரும் வலியர்கொல்'' என்று வினவுகின்றான். உடல் வளர்ச்சிக்குப் படைப் பயிற்சியும், அறிவு வளர்ச்சிக்குக் கல்வியும் வேண்டுவனவாம் என்பதைச் சங்ககாலத் தமிழ்மகன் நன்கு அறிந்திருந்தான். உடல் வன்மையால் மனத்திட்பமும் வினைத்திட்பமும் பிறக்கும் என்பது அவனது உள்ளக்கிடை.

வீரமகனொருவன், மனக்கினிய மகளொருத்தியை மணம் புணருங் காலத்தே, அரசனது போர்ப்பறை முழங்கக் கேட்டான். ஒருத்தியை மணந்து நுகரும் இன்பத்திலும், தன் நாட்டிற்கு உற்ற இடர் நீக்குதலால் உளதாகும் இன்பம் பெரிதெனக் கருதி மணத்தைத் தள்ளிவைத்துப் போர்க்குச் செல்கின்றான்.

"விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ,
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃகு மறுத்த உடம்பொடு
வாரா உலகம் புகுதல் ஒன்றெனப்
படைதொட் டனனே குரிசில்."

என்று பரணர் கூறுகின்றார்.

இவ்வண்ணம் கல்வியறிவும், உடல் வன்மையும் ஒருங்கு பெற்றுத் திகழும் தமிழ் மகனுக்குத் திருமணம் செய்விக்கும் எண்ணம் இந்நாளில், பெற்றோர்க்கு அமைகின்றது. அந்நாளில் அங்ஙனம் இல்லை. தக்கோனாய் மணப்பதம் பெற்ற மகன், தன் மனம் விரும்பும் மாண்புடைய மகள் ஒருத்தியைத் தானே தேர்ந்து காண்கின்றான். அவளது மனவொருமையைப் பல நெறிகளால் ஆராய்கின்றான். கற்பின் திண்மையைக் களவில் ஒழுகிக் காண்கின்றான். பின் தன் களவு நெறி உலகறிய வெளிப்படுத்துகின்றான். "அம்பலும் அலரும் களவு வெளிப்படுத்தலின், அங்கு அதன் முதல்வன் கிழவன் ஆகும்" என்றே ஆசிரியர் தொல்காப்பியனார் உரைக்கின்றார். பின்னர், பெற்றோர் மணத்திற்கு இயைந்து மணம் புணர்விக்கின்றனர்.

மனைவாழ்க்கையின் மாண்பு குறித்து அவன் செய்யும் திறம் மிக்க வியப்புத் தருவதாகும். தான் நடத்தும் வாழ்க்கை தன் நலமே குறித்த வாழ்வாதல் கூடாது. ஈதலும் இசைபட வாழ்தலுமே மனைவாழ்க்கை, தன் வாழ்வு ஏனை எவ்வகை மக்கட்கும் ஏமம் பயக்கும் வாழ்வாதல் வேண்டும். தான் ஈட்டிய பொருளைத் தானே நுகர்தலின்றிப் பிறர்க்கும் பயன்பட வாழவேண்டிய தமிழ்மகன் பொருள் ஈட்டல் கருதிக் கலங்கள் ஏறிக் கடல் கடக்கின்றான். செல்பவன் தன் மனைவியின் பிரிவாற்றாமை கண்டு தெருட்டு முகத்தால் வாழ்வின்

குறிக்கோளை நன்கு வற்புறுத்துகின்றான். அவன் பிரிந்தவழி, அதனை அவன் மனையுறையும் மகளிர் பேசிக்கொள்வதால் நாம் இனிது அறியலாம்.

"அறந்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலும், நாளும்
வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்."

என்றும்,

"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்
பிறன்கடைச் செலாஅ செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும் புனைஇழை."

என்றும் பொருளைக் கருதித் தமிழ்மகன் வாழ்ந்திருக்கின்றான். இவ்வண்ணம் தானும், தன் நாட்டு மக்களும் பொருட் குறைபாடின்றி இனிது வாழ்தல் வேண்டும்; நாட்டில் வறுமை தோன்றின், (நாட்டவர் மனத்தே நல்ல எண்ணங்கள் வற்றிவிடும்;) நல்லறிவு மாயும் என்று அஞ்சி, அவன், "**செல்வம் என்பது சேர்ந்தோர் புன்கண் அஞ்சும் மென்கட் செல்வம்**" என்று பிறர்க்கென வாழ்தலைப் பொருளாகப் பேணி வாழ்ந்து வந்தான்.

தான் ஈட்டிய பொருளைத் தானும் ஏனைத் தமிழ்மக்களும் பிறரும் பெற்று இன்ப வாழ்வு நடத்த வேண்டும் என விரும்பும் அத் தமிழ்மகனுக்கு வேறொரு கடமையும் உண்டாகின்றது. நாட்டுப் பகைவரால் உண்டாகும் கேடும் அச்சமும், வாழ்க்கை யின்பத்தைச் சிதைக்கும் என்ற எண்ணங் கொள்கின்றான். அதனால், தன் நாட்டிற் காவல் குறித்துப் போர் செய்தற்கும், பிற வினை செய்தற்கும் அவன் உள்ளம் கொண்டு, அது குறித்து வினை செய்வதும் கடமை என்பதை உணர்கின்றான். தான் இளமையிற் பெற்ற கல்வி, நாட்டின் நலம் கருதிச் செய்வன செய்தற்குப் போதிய துணை செய்யாமை கண்ட வழி, நிரம்பிய கல்வி பெறுவதும் கடன் என்று தெளிகின்றான். ஒரு கால் ஒரு தமிழ்மகன் கல்வி குறித்துப் பிரிந்திருந்தபோது, அவன் பிரிவாற்றாது வருந்திய அவன்றன் மனைமகளிர், வாடைக் காற்றை நோக்கிக் கூறுவாராய், "ஏ, வாடைக்காற்றே,

தமியோர் மதுகை தூக்காய் தண்ணென,
முனிய அலைத்தி, முரண்இல் காளை

கைத்தொழு மரபின் கடவுட் சான்ற
செய்வினை மருங்கின் சென்றோர் வல்வரின்,

நீ, கரிகாலனோடு வாகையென்னுமிடத்தே ஒன்பது வேந்தர் ஒன்றுகூடி எதிர்த்தபோது, அவனால் அலைப்புண்டு தம் கொற்றக்குடை இழந்த அந்தப்

"பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ எமக்கே."

என்கின்றனர். இங்கே, தமிழ்மகன் மேற்கொண்ட கல்வியை, "கைதொழு மரபின் கடவுட்சான்ற செய்வினை" என்கின்றனர். அரசு முறையாயினும், வாழ்க்கை முறையாயினும் அவ்வதற்கு வேண்டிய கல்வியறிவு இல்வழிச் சிறவாது என்பதற்காகக்,

"காவற் சாகாடு உகைப்போன் மாணின்,
ஊறின் றாகி ஆறுஇனிது படுமே;
உய்த்தல் தேற்றா னாயின், வைகலும்
பகைக்கூழ் அள்ளல்பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே."

என்று இளந்திரையன் கூறுகின்றான்.

நாட்டின் காவல் குறித்துப்போருடற்றி உயிர்கொடுப்பது நல்வினையென்றும், அவ்வாறு உயிர்கொடுத்துப் புகழ் கொள்வாரே சிறந்தோர் என்றும் தமிழ்மகன் கருதியிருந்தான். அக் கருத்தை அவனேயன்றி, அவன் மகளிரும் இனிதறிந்து இருந்தனர். பகைவருடன் போருடற்றச் சென்ற தமிழ்மகன் ஒருவன்றன் மனைமகளிர்,

"நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர் எனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்"

என்று பேசிக் கொள்கின்றனர். இந்நெறியில் மகளிர் வீரத் தீ எரிய நிற்கும் உள்ளமுடையராதல் சங்ககாலத் தமிழ்மகள் இயலறியும் நெறியிற் புலப்படும்.

மனைவாழ்க்கையில் பொருளீட்டல், கல்வியறிவு பெறுதல், வினைசெய்து நாடுகாத்தல் முதலியன செய்தொழுகும்

தமிழ் மகன் மகப்பேறு குறித்து மகிழ்கின்றான். மக்களை யில்லாத வாழ்க்கையை விரும்புவதிலன். **"மக்களை இல்லோர்க்குப் பயக்குறையில்லை தாம்வாழும் நாளே"** என்று கூறுவன். பெற்ற மக்கள் தம் குடியின் உயர்ச்சிக்கு உழைத்தல் வேண்டுமெனக் கருதுகின்றான். அன்ன மக்களைப் பெற்றோரை வாயார வாழ்த்தி மகிழ்வன்.

"எண்ணியல் முற்றி ஈரறிவு புரிந்து,
சால்பும் செம்மையும் உளப்படப் பிறவும்
காவற் கமைந்த அரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பயந்தனை."

என்று பாராட்டுதலைக் காண்க.

இனி, இவனது உள்ளத்தே கடவுள் உணர்ச்சி வீறுபெற்று நிற்கின்றது. **"பல்லோரும் பரம்பொருள் ஒன்று உண்டு; அதன்பால் பரிவுகொடு பரசி வாழ்தல் எல்லோரும் செய்கடனாம்"** என்று கருதி வாழ்பவன். இவன் ஆண்டவனை வழிபட்டு வேண்டுவன மிக்க வியப்புத் தருவனவாம். சங்க காலத்தே ஏனை நிலத்து மக்கள் வேண்டியன வேறு. பிறர் அழிவதையும், பிறர் ஆக்கம் கெடுவதையும் பொருளாகக் கருதி ஆண்டவனை வேண்டினர் பிறர்; தமிழன்,

"யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல,
அருளும் அன்பும்அறனும் மூன்றும்."

என்றும்,

"யாமும் எம் சுற்றமும் பரவுதும்,
ஏம வைகல் பெறுகயாம் எனவே."

என்றும் வேண்டுகின்றான்.

இங்ஙனம், சங்ககாலத் தமிழ்மகன், தன் வாழ்க்கையைத் தனக்கேயன்றிப் பிறர்க்கும் தன் நாட்டின் நலத்துக்கும் எனக் கருதிச் செலுத்தி, வழிபாட்டை மறவாது, மேற்கொண்டு, அவ்வழிபாட்டிலும் தன் வாழ்வின் குறிக்கோள் கை கூடுதற்கு ஆக்கமாகும் **அருள், அன்பு, அறம்** என்ற மூன்றுமே விரும்பியிருந்த நிலையை, இற்றைநாளில் மக்கள் அறிந்து நலம் பெறுவாராக!

# 11. தமிழ் மகளிர்

பண்டை நாளைத் தமிழகத்தில் மகளிரது நிலைமையை அறிந்துகொள்வது மிகவும் நன்று. மக்கட் படைப்பில் ஆடவர் பெண்டிர் என்ற இருபாலார்க்கும் உடலமைப்பில் சிறிது வேறுபாடு உண்டேயன்றி நினைவு, சொல், செயல், அறிவு என்ற கூறுகளில் வேற்றுமை கிடையாது. உடலமைப்பு வேறுபாடு மக்கட் பேற்றுக்கும் மக்களினப் பெருக்கத்துக்கும் ஏற்ற வகையில் துணைபுரிகின்றது. அதனால் உலகியல் வாழ்க்கைக்கு ஆணும் பெண்ணும் ஒன்றற்கொன்று இன்றியமையாத் துணையாதலை நாம் காண்கின்றோம். புறத்தே சென்று வாழ்க்கைக்கு வேண்டும் உண்டி, உறையுள் முதலியன நாடி நல்கும் வகையில் ஆடவர் சிறந்து நிற்றலின் அவரது உடற்கூறு ஏனைப் பெண்டிரது உடலினும் வலி மிக்கதாகின்றது. மகப் பெறுதலும் அவற்றை வளர்த்தலும் ஆகிய செயல் வகைகளில் பெண் மகளிர் ஆடவரது துணைமையைப் பெரிதும் நாடுதலின் ஆடவர்நிலை சிறிது உயர்வதாயிற்று. இன்னோரன்ன காரணங்களால் மக்களுலகில் பெண்டிரது நிலை சிறிது அடங்கிய தன்மைத்தாக உளது. இந்த நிலைமையினைப் பழங்கால மக்களில் சிலர் நன்கு உணர்ந்து கொண்டு மகளிரைத் தங்கள் நலனுக்காகப் படைக்கப்பட்டவ ரெனக் கருதி ஒழுகினர்.

நம் தமிழகம் பண்டை நாளில் பிற நாடுகளோடு தொடர்புற்று, வாணிகம் முதலிய துறைகளில் சிறந்து விளங்கியபோது, மேலை நாடுகளில் கிரேக்கரும் யவனரும் எகிப்தியரும் பாரிசேயரும் பாபிலோனியரும் பிறரும் மதிப்புடைய நாகரிகம் கொண்டு விளங்கினர்; அவர்களுடைய வரலாற்றுக் குறிப்புகளும் அரசியல் நெறி முறைகளும் அறிவுரைகளும் இன்றும் மேனாட்டவரால் பாராட்டப்படும் தகுதி படைத்துள்ளன. அவர்களுடைய வாழ்வில், மகளிர் நிலை ஆடவர்க்கு அடிப்பணி புரியும் துறையிலேயே இருந்தது.

எரோடாட்டசு முதலியோர் குறிப்புகளால் ஆண் மக்களால் ஈட்டப்படும் பொருள் வகையுள் ஒன்றாகவே மகளிர் கருதப்பட்டமை தெரிகிறது. மக்களைப் பெறுதலும் வளர்த்தலும் குடும்பத் தொழில்களைச் செய்தலுமே அவர்கட்குச் சிறந்த பணிகளாகக் குறிக்கப்படுகின்றன. எகிப்தியர்கள் மகளிர் பலரை மணந்துகோடல் மரபாகக் கொண்டனர். தொடக்கத்தில் அஃது அரசர்பால் தோன்றி நாளடைவில் யாவர்க்கும் எய்துவதாயிற்று. இசுலாம் சமயம் பரவிய பின் எகிப்து மன்னர் மகளிர் பலரை மணத்தல் கடமையாகக் கொண்டனர். ஒருவன் தான்கொண்ட மனைவியர் பலரும் அவர் வயிற்றிற் பிறக்கும் மக்களும் தனக்குக் கிடைத்த செல்வமாகக் கருதினான். அவர் அனைவருடைய உழைப்பும் குடும்பத்துக்குப் பொருள் வருவாயாக இலங்கிற்று. வென்ற வேந்தர் தோற்றோர்பால் பெறப்படும் திறைப் பொருளாக மகளிரைப் பெறுவது அந்நாளைய இயல்பு. வேந்தரைக் காணச் செல்லும் தலைவர்களும் செல்வர்களும் இளமகளிர் பலரை அவர்கட்குப் பரிசுப் பொருளாகவும் வழங்கினரென எகிப்து நாட்டு வரலாறு கூறுகிறது. இம் மனைவியர்க்கு வேறாக இற்பரத்தையராக நூற்றுக் கணக்கில் மகளிரைத் தொகுத்து வைத்தல் மேலை நாட்டு அரசர் செயல்முறையாக இருந்திருக்கிறது. இவ் வழக்கம் கிரேக்கர் யவனர் முதல் பாபிலோனியர் கிசியர் ஈறாக எல்லோரிடையும் இருந்துளது. அரபியர் மாத்திரம் இத் துறையில் ஓரளவு உயர்ந்த நோக்கம் கொண்டனர். ஆண் மக்களைப் போலப் பெண்மக்களும் அரசியல் வகைகளிலும் போர்த் துறையிலும் சிறந்த பங்கு கொண்டனர். முறை புரிதல். படைக்கலம் பயிறல், படைத்தலைமை தாங்கல் முதலியவற்றில் மகளிர் ஆடவரை யொப்ப விளக்க முற்றனர். அறிவாராய்ச்சி, இசை, கூத்து, இலக்கியப் புலமை, இனிய சொல்வன்மை என்ற நலம்பல வற்றில் மகளிர் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். ஆடவர் அனைவரும் மணம் புரிந்துகோடல் இன்றியமையாதது; மணமாகாமை ஓர் ஆடவனுக்கு இழிவையும் பழிப்பையும் நல்கிற்று. மக்கட் பேற்றுள் ஆண்மகப்பேறு கடவுள்பால் பெறலாகும் பேரருளாகக் கருதப்பட்டு வந்தது.

மேலைநாட்டுப் பாலை நிலப்பகுதிகளில் நாடோடிகளாக வாழ்ந்த மக்கள் பெண் மக்களைப் பெருஞ்சுமையாகவும்

வேண்டாப் பொருளாகவும் கருதினர். பழந்தமிழரிடையே நிலவிய நிரைகோடல் என்ற போர்த்துறைபோல, பாலை நில மறமக்கள் பகைவருடைய மகளிரைக் கவர்ந்துகோடலும் பின்பு அடிமைகளாக அவர்களை மேற்கொண்டு நடத்தலும் செய்து வந்தமையின், அவர்கட்கு மகப் பேற்றுள் பெண்களைப் பெறுதல் வெறுப்பையும் அச்சத்தையும் விளைவித்தது. பெண்ணினத்தின் பெருக்கத்தைக் குறைப்பது கருதிப் பெண் மகவுகளைத் தாம் வழிபடும் தெய்வங்கட்கு உயிர்ப்பலி செய்வதும் ஒருசில மக்களிடையே ஒழுகலாறாக இருந்தது.

அந்நாளில் நமது நாட்டின் வடபகுதியில் வாழ்ந்த மக்களும் கிரேக்க யவன எகிப்தியர்களைப் போலப் பெண்களை மகப்பெறுங் கருவியும் கணவனுக்கு மனைக்கண் இருந்து பணி புரியும் அடிமையுமாகவே கருதினர். ஒருவன் பல மகளிரை மணத்தல் விலக்கப்படவில்லை; அரசர் ஐந்து மகளிரை மனைவியராகக் கொள்ளலாம். அவர்கட்கு மேலும் மகளிரை வேந்தர் வரைந்து கொள்வர்; ஆயினும் அவர்கள் மனைவியராகும் தகுதியின்றி உரிமை மகளிர் என்ற பெயரால் நிலவுவர். முதல் மனைவியிருக்க வேறொருத்தியை ஒருவன் மணக்க விரும்பின், முதல் மனைவியின் இசைவைப் பெற்றுத் தான் மணந்து கொள்வான். இவ்வழக்கு மேலை நாட்டிலும் இருந்தது. ஆபிரகாம் என்பவன் சாரா என்ற மனைவி யொருத்தி இருப்பவும் அவளது இசைவு பெற்று இரண்டாம் மனைவியாக ஆகர் என்பவளை மணந்து கொண்ட வரலாறு இதற்குச் சான்று பகருகின்றது.

ஒருவன் ஒழுக்கமும் நற்பண்பும் எத்துணைச் சிறிதும் இலனாயினும் பொல்லாத காமுகனாயினும் அவன் மனைவி அவனையே தெய்வமாகக் கருதிப் பணிபுரிய வேண்டும் என்றும், மகளிர்க்கெனத் தனித்த முறையில் வேள்வியோ தவமோ விரதமோ இல்லையாகலான், கணவனுக்குச் செய்யும் தொண்டும் பணியுமே மகளிர்க்கு மேலுலக இன்பவாழ்வு பெறுதற்கு வாயிலாம் என்றும், மணமான ஒருத்தி தன் பெற்றோர் மனையில் இருந்துகொண்டு தன் கணவனுக்குப் பணிந்து அவன் விருப்பிற்கேற்ப நடவாளாயின், நாடாளும் வேந்தன் சான்றோர் கூடிய பேரவையில் அவளை நிறுத்தி வேட்டை நாய்கள் கடித்துத்

துன்புறுத்துமாறு அவளை அவற்றிற்கு இரையாக்க வேண்டுமென்றும், தன் கணவன் நற்குண நன்மாண்புகளை இழந்து பொல்லாக் குடியனாயும் நோயுற்றவனாயும் மாறியது காரணமாக அவனை வெறுத்துப் புறக்கணிப்பாளாயின் அவள் மூன்று திங்கட்கு உயரிய ஆடையணிகலனின்று வேறோர் தனியிடத்தே ஒதுக்கப்பட வேண்டுமென்றும் **மனுநூல்** கூறுகிறது. கணவன் சொல்வழி யடங்கி யொடுங்கி ஒழுகுவதே மகளிர் கடன்; அதுவே அவர்கட்கு உயர்ந்த அறமாம் என **யாஞ்ஞுவல்கியர்** இயம்புகின்றார். கணவன் உயிரோடு இருக்கும்போதே தான் பேறு விரதம் மேற்கோடலும் வேள்வி செய்தலும் உடையளாயின், அவள் தன் கணவன் தலையை வெட்டினவளாகின்றாள் எனவும், புண்ணிய நீராடும் ஒருத்தி, தன் கணவனுடைய அடிகளையோ உடல் முழுவதுமோ நீராட்டி அந் நீரையே உட்கொள்பவள் புத்தேளிர் வாழும் உலகில் பெருஞ் சிறப்புப் பெறுவாள் எனவும் **அத்திரி** யென்பார் அறிவிக்கின்றார். மறுமையில் கணவன் எய்தும் கதியினும் மேற்கதியை மனைவியாவாள் பெறுவதில்லையாகலான், கணவனுக்கு அடங்காதொழுகுபவள் இறந்தால் இன்பவுலகு எய்தாள்; எனவே, அவள் என்றும் தன் கணவன் மனம் நோக நடவாளாதல் வேண்டும் என்று **வாசிட்டநூல்** வற்புறுத்துகின்றது. கணவற்கு அடங்காது ஒழுகுபவள் கையில் எவரும் உணவு தரப்பெறுதல் கூடாது; அவள் காமி எனக் கருதப்படுவாள் என **ஆங்கீரசர்** கடிகின்றார்.

மேலை நாட்டவரைப் போல நம் நாட்டு வட மொழியாளரும் மகளிரை உடைமைப் பொருளாகவே கருதினர். ஏனைப் பொருள்களைப் போல மகளிரையும் சூதாடு பணையமாகவும், விற்கவும் ஒற்றிவைக்கவும் கூடிய பொருளாகவும் மதித்தொழுகினர். இதற்கு இதிகாசங்களும் புராணங்களும் மிகப் பல செய்திகளைச் சான்று காட்டுகின்றன. உயிர்க்கு இறுதி நேரும் காலத்தாயின், சான்றோர் இழிக்கத்தக்க செயல்களைச் செய்தாயினும் உயிர் உய்தல் வேண்டும் என்பது அந்நாளைய அறமாகலின், அந் நிலையில் மகளிர் அறமல்லன செய்யினும் அவர் விலக்கப்படார். மணமான மகளிர்க்குப் பதி விரதமே சிறந்த அறம். தன் கணவனையன்றிப் பிறர் தம்மைத் தொடினும் தம்பாற்படினும் தம்மை விரும்பினும்,

மனைவியாவாள் அவர்களை மனத்தால் விரும்பாமையே பதிவிரதத்தின் பண்பு. கணவன், ஆண்மையிழப்பினும் அறிவு திறம்பினும் வேறு நாடேகினும் பெருநோய் எய்தினும் மனைவியாயினாள் வேறோர் ஆடவனை மணந்துகொள்ளலாம். கொண்ட கொழுநன் குடிவழி யெஞ்சும் நிலையில் மனைவி வேறொருவனைக் கூடி மகப் பெறுவது குற்றமின்று என்றொரு கொள்கை பண்டை நாளில் இருந்தமைக்கு இதிகாசமாகிய பாரதம் ஏற்ற வரலாறொன்றைச் சான்று கூறுகிறது.

இனி, மேலைநாட்டு ஆங்கிலரிடையே மகளிர் இருந்த நிலையை நோக்கின் அஃது ஏனை மேலை நாடுகளினின்று வேறுபட்டதாகத் தோன்றவில்லை. அரசியல் வாழ்வில் அரச மகளிர்மட்டில் அரசிகளாக முடி சூடிக் கொள்ளும் உரிமை பெற்றிருந்தனர். கிறித்து சமயம் பரவிய பின்பே அந்நாட்டில் ஒருவன் பல மகளிரை மணக்கும் இயல்பு நீங்குவதாயிற்று. நெடுங்காலம் வரையில் மகளிர்க்கு அந்நாட்டவர் கல்வி நல்கவில்லை. சமயத்துறையில் தாபத மகளிர்க்கு லத்தீன் மொழி கற்பிக்கப் பெற்றமையின், கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்கும் பத்தாம் நூற்றாண்டுக்கும் இடையே தாபத மகளிர் சிலர் லத்தீன் மொழியில் சிறந்த புலமை பெற்றிருந்தனர். ஏனை யாவரும் மகளிர்க்கு மணமும் மகப்பேறுமே வேண்டப்படுவன என்ற கொள்கையிலே ஊன்றி நின்றனர். மணமாகுமுன் ஒருத்திக் கிருக்கும் உரிமை முற்றும் மணத்திற்குப் பின் அவளுடைய கணவன்பால் சேர்ந்து ஒன்றிவிட்டன. மக்களைப் பேணுதல் கல்வி கற்பித்தல் முதலியன பற்றிய உரிமைகள் தந்தையிடமே இருந்தொழிந்தன. வரலாற்றுக் காலம்தொட்டு ஆங்கில நாட்டவரிடையே கணவற்கு வேறாக மகளிர்க்கு எவ்வகைச் சொத்துரிமையும் இல்லாமலே இருந்து வந்தது; கி.பி. 1882-இல் தான் மகளிர்க்குச் சொத்தில் உரிமை வழங்கப் பெற்றது. அரசாளும் வேந்தன் மக்களுள் மகளிர்க்கு அரசியல் உரிமை பண்டையிருந்தது; ஆயினும் அம் மக்களுள் ஆண் மக்கள் இருப்பின், அவர்க்கே முதலுரிமை நிலவிற்று. சென்ற 1918-இல் தான் மகளிர்க்கு வாக்குரிமை வழங்கினர்; அதன் பிறகே ஆங்கில மகளிர் பாராளுமன்ற உறுப்பினராகும் தகுதி பெற்றனர். அமெரிக்கர் 1920-இல் அவ்வுரிமையை மகளிர்க்கு வழங்கினர். உயரிய கல்வியும் கலையும் பெறுதற்கேற்ற வாய்ப்பும் ஆங்கில

நாட்டு மகளிர்க்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில்தான் உண்டாயிற்று. இவர்களையெல்லாம் நோக்கின் பண்டை நாளைத் தமிழ் மகளிரின் நிலை பெரிதும் வியத்தற்குரியதாக விளங்குகிறது.

பழந் தமிழ் மக்களிடையே ஆடவர், பெண்டிர் என்ற இருபாலார்க்கும் பிறப்பு, அறிவு, ஒழுக்கம் முதலிய கூறுகளில் வேற்றுமை காணப்படவில்லை. ஆண் மக்களை யொப்பவே பெண்மக்களும் பேணப்பட்டுள்ளனர். கூர்த்த அறிவுடைமையே மக்களில் வேற்றுமை காட்டிநின்றது. திருவள்ளுவரும் அறிவறிந்த மக்கட் பேற்றையே சிறந்த பேறாக எடுத்துரைக்கின்றார். அதற்குக் காரணம், ஆணாயினும் பெண்ணாயினும், மக்கள் தம்மினும் மிக்க அறிவுநலம் உடையராயினும் உலகிலுள்ள மன்னுயிர்க்கெல்லாம் வாழ்வு இனிதாம் என்பது கருத்து. அதனால் ஆடவர் பெண்டிர் இருபாலாரும் திருந்திய கல்வி பெறுவதில் வேறுபாடின்றி யொழுகினர். பெண் மக்கட்குரிய நலம் கூறப்புக்க **தொல்காப்பியர்** "செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும், அறிவும் அருமையும் பெண்பாலான" என்று தெரிவிக்கின்றார். கல்வி கேள்விகளால் உண்டாகும் திண்ணிய அறிவொழுக்கம் கற்பு என்று தமிழ்ச் சான்றோரால் குறிக்கப்படும். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற வேந்தனது நலம் கூறப்புகுந்த சான்றோர், "உலகம் தோன்றிய மேம்படு கற்பின் வில்லோர் மெய்ம்மறை" என்றும், வேதங்களைக் குறிக்கக் கருதிய சான்றோர், அவற்றை "எழுதாக் கற்பு" என்றும் குறிப்பதே இப்பொருண்மைக்கு ஏற்ற சான்றாகும். மகளிர்க்குக் கல்வியறிவின் திணிநிலை யொழுக்கத்தைக் கற்பென வாளா ஓதாமல், "செயிர்தீர் காட்சிக் கற்பு" என்று தொல்காப்பியர் சிறப்பித்துக் கூறியருளுகின்றார். கற்பென்னும் திண்மையுண்டாவது மகளிர்க்குரிய தகுதிகளுள் பெருமை வாய்ந்தது என்று பண்டைத் தமிழர் பணித்துள்ளனர்.

மகளிர் மகப்பெறுதல் என்பது இயற்கையறம்; அதனால் உடற்கூறு வேறுபட்டதன்றி, ஆணுக்கு அடிமையாய்த் தனக்கென உரிமையும் செயலுமற்றிருத்தற்கன்று என்பது தமிழ் மரபு. ஆண்டவன் படைத்தளித்த இவ்வுலகில் ஆணைப்போலப் பெண்ணும் வாழப் பிறந்தமையின் ஆணுக்கு உரிமைதந்து பெண்

'ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்."

என்ற குறட்பா எடுத்துரைக்கின்றது அதனால். இது எடுத்தோத்து அல்லது எடுத்துரை ஆகும். இங்ஙனம் எடுத்தோதப்படும் உரையில் "ஒரு நாளை இன்பம்" என்பதும் "பொன்றுந் துணையும் புகழ்" என்பதும் விளக்கப்பட வேண்டுவன. அதனை விளக்கும் பரிமேலழகர், "ஒரு நாளை இன்பம், அந்நாள் ஒன்றினும் கருதியது முடித்தேம் எனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம்" என்று கூறுகிறார். "பொன்றுந் துணையும் புகழ்" என்பதில் பொன்றுதல், இறத்தல்; பொறுத்தார்க்கு இறக்கும் துணையும் புகழ் என்பது கருத்தாய்ப் பொருள் குற்றமாகிறது; புகழ் நிற்குமிடம் உலகமே தவிர புகழைச் செய்பவரல்ல: அவர் இறந்து போனாலும் புகழ் இறந்து போவதில்லை. இதனை விளக்குதற்குப் பரிமேலழகர் ஒரு சூழ்ச்சி செய்கிறார். புகழுக்கு ஆதாரம் உலகம் என்று காட்டி, "ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், ஏற்புடைய உலகம் என்னும் சொல் வருவித்துரைக்கப்பட்டது" என உரைத்து, "பொறுத்தார்க்கு உலகம் அழியும் வரைப் புகழ் நிற்கும்" எனக் குறட்பாவின் எடுத்துரையை விளக்கம் செய்கிறார். எடுத்துரை, விதியும் விலக்குமென இரண்டாகப் பிரிந்து, பொதுவும் சிறப்பும் என வகைப்பட்டு, எய்தாதது எய்துவிப்பது, எய்தியது விலக்குவது எய்தியதன் மேற் சிறப்பு விதி கூறுவது, எய்தியது விலக்கிப் பிறிது வகுப்பது. எய்தியது இகந்து படாமைக் காப்பது எனப் பல கூறுகளாகப் பிரிந்து செல்வது "விதியெல்லாம் எய்தாததனை எய்துவிப்பதும், ஒரு கால் எய்தி ஒருகால் எய்தாதா கற்பாலதனை அவ்வழியும் இகந்து படாமற் காத்து நியயமாக எய்துவிப்பதும், ஈரிடத்து எய்தற்பாலதனை ஒரு மருங்கு மறுப்பதும் என மூவகைப்படும்" என மாதவச் சிவஞான முனிவர் முதலாயினோர் கூறுவர்: அவற்றைக் கருத்திற் கொண்டுரைப்பது, (உரை காண்பது) உரைகாரர் மரபு: ஆயினும் அவற்றை விரித்துரைப்பதற்கு இங்கு இடம் இல்லை.

இலேசு என்பது எடுத்துரைக்கும் கூற்றில் வேண்டாத சொற்களைப் பெய்தலும், வேண்டுவதைத் தொகவைத்தலும். முறை பிறழ்ந்து உரைத்தலும் எனப் பலதிறமாக வரும்.

அவற்றால், பாட்டைப் பாடும் புலவற்கு உள்ளத்தில் ஒரு குறிப்பு உண்டு: அது ஆராய்ந்து காணத் தக்கது என்பது இலேசின் குறிக்கோள்.

"ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"

என்ற குறட்பா நல்லொழுக்க முடையவர்க்குத் தீய சொற்களைச் சொல்வதென்பது ஆகாத தொன்று என உரைக்கின்றது. தீய சொற்களைச் சொல்வதைத் "தீய வாயாற் சொலல்" எனத் திருவள்ளுவர் கூறுகின்றார். "தீய சொலல்" என்றாலே தீய சொற்களை வாயினாற் சொல்லுதல் என்று பொருள்பட நிற்பதால். "வாய்" என்ற சொல் இலேசு. இந்த இலேசினால் திருவள்ளுவருடைய உள்ளக் குறிப்பு யாது? எனக் காணலுற்று "வாயாற் சொலல்" என்றால் ஏன்? எனக் கடாவிக் கொண்டு "வாய் என வேண்டாது கூறினார். நல்ல சொற்கள் பயின்றது எனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு" என உரைக்கின்றார். இலேசினால் பொருள் கொள்ளப்படும் இம்முறை வட மொழியிலும் உண்டு என அறிவிக்க "இதனை வட நூலார் தாற்பரியம்" என்று கூறுவர் எனப் பரிமேலழகர் உரைக்கின்றார்.

உத்தி என்பது நூல் உரைக்கும் ஆசிரியன் கைக்கொள்ளும் அறிவு நெறி, அறிவுப் பெருக்கத்துக்கும் நுண்மைக்கும் ஏற்ப அது விரிந்து செல்லும் என்று இலக்கணப் புலவர் இயம்புவர். ஊழ் என்ற பகுதியில்,

"நல்லவை யெல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு."

என்ற குறட்பா வருகிறது. இதனைக் கிடந்தபடியே கொள்ளின் இக்குறட்பா செல்வம் பெற முயல்பவர்க்கு நல்லவை தீயவையாம். தீயவை நல்லவையாகும் என்று பொருள் பட்டுத் தெளிவில்லாமல் கெடுகிறது. இது எடுத்தோத்து, இலேசு என்ற இரண்டாலும் விளக்கம் பெறாமல் உத்தியை நாடி நிற்கிறது. "அதிகார முறை" என்ற உத்தியால் தீயூழ் வயப்பட்டார் செல்வம் செய்யுங்கால் நல்லவை யெல்லாம் தீமையாய் முடியும்: நல்லூழ் உற்ற போதில், தீயவை செயினும் நல்லவையாய்ச் செல்வம் எய்துவிக்கும் என உரை செய்யப்படுகிறது.

இவ்வாறு எடுத்துரை. இலேசு, உத்தி என்ற நெறிகளில் உத்தி வகை, இலக்கணவமைதி காட்டல், தருக்க நெறியில் விளக்கம் கூறல், வினாக்கட்கு விடை வழங்கல், கருத்துரை தருதல் என வருவன பலவற்றையும் நினைவிற் கொண்டு திருக்குறட்குப் பொருள் விளக்கம் செய்கிறார் பரிமேலழகர்.

"செய்துஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று."

என்பது குறட்பா. அதன்கண், 'செய்து ஏமம் சாராச் சிறியவர்'' என்ற தொடர் பரிமேலழகரது இலக்கண அறிவை ஈர்க்கின்றது. ''ஏமம் சாரா'' என்ற தொடர் சிறியவர் என்ற சொல்லோடு இயைவது பொருத்தமா? ''புன்கேண்மை'' என்ற சொல்லோடு இயைவது பொருத்தமா? என்று ஒரு மயக்கம் உண்டாகிறது. அதை எண்ணிய பரிமேலழகர் ''ஏமம் சாராச் சிறியவர்'' என்று இயைப்பது உண்டு; அது கூடாது. ''சிறியவர் என்பதனைக் கொள்ளின் செய்து என்பது நின்று வற்றும்'' என உரைக்கின்றார். உரை எழுதும்போது இத்தகைய குற்றம்படக் காண்பது முறையாகாது. இதைக் கருத்திற் கொண்டு, ''இதற்குப் பிறரெல்லாம் சொல்லிலக்கணத்தோடு மாறுகொள உரைத்தார்'' என்பதொன்றே பரிமேலழகர் நன்கு எண்ணி எழுதுகிறார் என்பது விளங்கும்.(817)

"மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும்."

என்பது வேறொரு குறட்பா. இதன்கண் இரண்டு கருத்துக்கள் கூறப்படுகின்றன. ஒன்று வெகுளியை மறத்தல் வேண்டும் என்பது. மற்றொன்று அதனால் தீயவை பிறக்குமென்பது. இவ்விரண்டிற்கும் ஒரு தொடர்பு காட்டினாலன்றி, இரண்டும் ஒரு குறட்பாவில் கூறுதற்கு ஆகா. கூறப்பட வேண்டுமாயின் இரண்டிற்கும் ஒரு தொடர்பு இருத்தல் வேண்டும். தொடர்பில்லாத இரண்டு கருத்துக்கள் ஒரு குறட்பாவில் கூறப்படா என்பது உரை மரபு. ஆனால், இரண்டிற்கும் தொடர்பு காணும் போது வெகுளியை மறவாவிடத்து தீமை உண்டாகும் என இரண்டிற்கும் காரண காரியத் தொடர்பு கண்டு, மறத்தல் வெகுளியை அதனால் வரும் என்பதை ஏதுவாகவும் நிறுத்திப்

பரிமேலழகர் பொருள் உரைக்கின்றார். அது அவரது உரைக்கு ஏற்றமும் அழகும் தருகிறது.

"கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்."
"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்:"

எனச் சில குறட்பாக்களைத் திருவள்ளுவர் வினா வடிவில் தருகின்றார். உரைகாரன் அதற்கு விடை கூறவேண்டும். அது உரை மரபு. "பயன் என்கொல்" என்பதற்கு விடை கூறும் பரிமேலழகர் "பயன் இல்லை" என்று கூறல் வேண்டும். இங்ஙனம் கூறுபவர் "என் கொல்" என்பதைப் பற்றிக் கொண்டு. இதன்கண் "எவன்" எனும் வினாப் பெயர் "என்னென்றாய் ஈண்டு (பயன்) இன்மை குறித்து நின்றது" என்கின்றார்.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்."

என்ற இக்குறளுக்கு உரை எழுதும் பரிமேலழகர் வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் பயன் இல்லை என்றல் வேண்டும்; ஆனால், அவர் அதனை, "செத்தால் இழப்பதும் வாழ்ந்தால் பெறுவதும் இன்மையில் இரண்டும் ஒக்கும்" என்கின்றார். இவ்வாறே.

"உறினட் டறினொரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்."

என்ற திருக்குறள் உரையில் நட்பால் பயனும், பிரிவால் இழப்பது ஒன்றுமில்லை என்று சொல்ல வரும் பரிமேலழகர் "அவர் மாட்டு நொதுமற் றன்மையே அமையும்" என உரைக்கின்றார்.

இனித் திருவள்ளுவர் பொதுவாக உரைக்கின்ற சில கருத்துக்களைத் தெளிவுபட விளக்குவதே உரைகாரர் கடன் என்ற உண்மையைக் கடைப்பிடித்துப் பரிமேலழகர் விளக்குகின்ற திறம் இனிது தோன்றுகிறது.

"யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற."

என்ற குறளில் ''யாம் மெய்யாக் கண்டவை'' எனச் சிலவற்றைப் பொதுவகையாற் கூறுகின்றார் திருவள்ளுவர், அவை யாவை? எனக் கேட்கும் மாணவருக்கு விடை கூறுவது உரையாசிரியர் கடன். இக் கடமையை அறிந்தாற்றுகின்ற பரிமேலழகர், உரையின்கண் ''மெய்யாக் கண்டவை, ஆகமங்கள் என உரைக்கின்றார்'' அது எங்ஙனம் எனும் வினாவிற்கு விளக்கம் எய்தும் பொருட்டு, தங்கண் மயக்க மின்மையின் பொருள்களை உள்ளவாறு உணரவல்லாராய்க் காம வெகுளிகளின்மையின் அவற்றை யுணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய இறைவர் அருளான் உலகத்தார் உறுதி யெய்துதற் பொருட்டுக் கூறிய ஆகமங்கள் என்று தெரிவிக்கின்றார். ஆகமங்களை மெய்ந் நூல்கள் என விளக்கக் கருதும் பரிமேலழகர், ஆகமங்களை உரைத்த ஆசிரியர்களை, பொருள்களை உள்ளவாறு உணர வல்லவர் என்றும், உணர்ந்தவற்றை உரைக்க வல்லவர் என்றும் அவரே இறைவர் என்றும் தெரிவிக்கின்றார். ஆகமங்களை அவர் ஏன் எழுதினார் என்பதற்குக் காரணமும் காட்டுகின்றார். உலகத்து மக்கள் மேல் உண்டான அருள் உணர்வால், அவர்கள் உறுதி எய்தும் பொருட்டு இந்த ஆகமங்கள் எழுதப்பட்டன என விளக்கும் வகையில் ''அருளான் உலகத்தார் உறுதி எய்துதற் பொருட்டு'' என்கின்றார்.

இனி பொய்யாமை, கொல்லாமை ஆகிய இரண்டு அறங்களை வற்புறுத்துகின்ற திருவள்ளுவர்,

''ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.''

என உரைக்கின்றார். இக்குறளைக் கேட்கும் மாணவன் உள்ளத்தில், இரண்டறத்துள்ளும் யாது சிறந்தது என்ற ஐயம் எழுகிறது. திருவள்ளுவரே, முதன்மையைக் கொல்லாமைக்கு வைத்து அதற்குப்பின் பொய்யாமையை வைத்து உரைக்கின்றார் என்று சொல்வது ஒருவாற்றால் விடையாகும். அதன்கண், காரணம் காட்டப்படாமையால், காரண காரிய முறையில் வைத்து உரைப்பது உரைகாரர் கடமையாகிறது. அதனால், பரிமேல்ழகர் ''பொய்யாமை பொய்யாமை யாற்றின்'' எனவும், ''யாமெய்யாக் கண்டவற்றுளில்லை'' எனவும் கூறினாராகலின், இரண்டறத் துள்ளும் (கொல்லாமை, பொய்யாமை) யாது

சிறந்ததென்று ஐயம் நிகழுமன்றே, அது நிகழாமைப் பொருட்டு ஈண்டு அதன் பின்சாரப் பொய்யாமை நன்றென்றார்; முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின், அதனைப் "பின்சார நன்றென்றது" நன்மை பயக்கும் வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும் இதனைப் பற்ற, அது திரிந்து வருதலான் என உணர்க" என எழுதுகிறார். இதனை இந்நாளைய சீர்த்த இலக்கிய விமர்சகர்கள் (Advanced literary Critics) Logical interpretation with psychological segeence என்று கூறுகின்றனர்.

இனி, "மெய்யுணர்தல்" என்ற பகுதியில் மெய்ப் பொருளுக்குச் செம்பொருள் என்ற பெயர் குறித்து,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு"

எனத் திருவள்ளுவர் கூறுகின்றார். "செம்பொருள்" என்பதை விளக்க வந்த பரிமேலழகர் "தோற்றக் கேடுகள் இன்மையின் நித்தமாய், நோன்மையால் அதனை யொன்றும் கலத்தல் இன்மையின் தூய்தாய், தான் எல்லாவற்றிலும் கலந்து நிற்கிற முதற்பொருள் என்றார்" என உரைக்கின்றார். இது ஒரு சமய சாத்திரம் படிக்கின்றோமோ என நம்மை மருட்டி இன்பம் செய்கிறது. இனி,

"வாய்மை யெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்"

என்ற குறட்பா உரையில், "எனப்படுவது" என்பதற்கு "என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறது" எனப் பொருள் கூறுகின்றார் பரிமேலழகர். "எனப்படுவது" என்பதற்கு, "என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது" என்று பொருள் கூறுதல் பொருத்தமா? என்று வினா எழுப்பிய மாணவனுக்கு விடை கூறுகிறார் பரிமேலழகர். வழக்கில், ஊர் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் உறையூரை எடுத்துக்காட்டி, "ஊரெனப்படுவது உறையூர்" என்றாற் போல என உரைக்கின்றார். நூல் உரை காண்பவர் இலக்கணத்தையோ, வேறு நூற்களையோ காட்டாமல் வழக்கினை எடுத்துக் காட்டுவது முறையாகுமா? எனின்,

"வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்டாக லான."

என்று தொல்காப்பியம் வழக்கினைக் காட்டுவது நேரிது எனக் காரணத்தோடு கட்டுரைக்கின்றது. ஆகையால் "என்று சிறப்பித்துச சொல்லப்படுவது" என்று, வழங்குதல் பொருத்தமே என உய்த்துணர வைக்கின்றார் பரிமேலழகர்.

ஒரு தலைவரின் கீழ் பணிபுரிபவன் தன்னை அவர் ஐயுறத் தக்க வகையில் நடந்து கொள்ளக்கூடாது; ஐயம் பிறந்து விடுமானால், பிறகு தெளிவிக்க ஒருகாலும் ஆகாது என்ற கருத்துப்பட,

"போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது"

என்று திருவள்ளுவர் கூறுகிறார் "கடுத்தபின் (ஐயம் தோன்றிய பின்) தேற்றுதல் யார்க்கும் அரிது" என்பது எவ்வாறு பொருந்தும் என மாணவன் கேட்கின்றான். இங்ஙனம், ஐயம் தெளிவு பெற வேண்டுங்கால் உரைகாரர்கள் இலக்கணம், வழக்கு, ஏது, எடுத்துக்காட்டு என்ற நான்காலும் விளக்கம் செய்வர். இங்கே நான்கனுள் இதனை எடுத்துக்காட்டால் விளக்கம் செய்கின்றார் பரிமேலழகர். "கடன் கொண்டான் தோன்றப் பொருள் தோன்றுமாறு போலக் கண்டுழி யெல்லாம் நினைக்கப்படுதலின் தேற்றுதல் யார்க்கும் அரிது" என எடுத்துக்காட்டினால் உரைக்கின்றார்.

பரிமேலழகரது உரையிற் காணப்படும் பல்வேறு அழகுகளில் அரிய சொல்முடிவு காட்டி இலக்கண அமைதி கூறுவது ஒன்று. "கவ்வையாற் கவ்விது காமம்" என்ற குறட்பா வில் "கவ்விது" என்பது சவ்வையென்னும் சொல் அடியாக வந்தது; ஆனால், அங்ஙனம் வருதற்குத் தமிழ் இலக்கணத்தில் இடமில்லை; செய்யுளினும் வழக்கு வலியுடைத்து என்பது பற்றி, "செவ்வையுடையதனைச் செவ்விது என்றாற் போலக் கவ்வையுடையதனைக் கவ்விது என்றார்" என்று பரிமேலழகர் உரைப்பது இலக்கணப் புலவர்க்கு வியப்பும் இன்பமும் தருகிறது. காரணம் என்ன எனின், செவ்வை உடையதனைச் செவ்விது என்றல் தொல்காப்பியர் மரபு. "எவ்வயிற் பெயரும் வெளிப்படத்தோன்றி அவ்வியல் நிலையல் செவ்விது என்ப,"

என்பது தொல்காப்பியம். அதை நினைவிற் கொண்டு பரிமேலழகர், ''செவ்விது'' என்றாற் போல என உரைக்கின்றார். இவ்வாறே ஒரு குறட்பாவில் ''புலப்பாயாக'' என்பது ''புலத்தி'' என்று வராமல் ''புலத்தை'' என வருகிறது. அவ்வாறு வருதற்குச் சொல்லியல் காண்கின்ற பரிமேலழகர், தமிழ் மரபு காணாது புதியதொரு சூழ்ச்சி செய்கின்றார். புலத்தை என்பதன் ஈற்றெழுத்தைப் பிரித்து விகுதி என்று பெயரிட்டு. அதற்கு மேற்கோளாகக் கலித்தொகைப் பாட்டில் ஒன்றைப் பற்றிக் கொண்டு ''புலத்தை என்புழி ஐகாரம். கடம் பூண்டு ஒருகால் நீவந்தை, என்புழிப் போல முன்னிலை வினை விகுதி'' என உரைக்கின்றார்; விகுதி யென்று நிறுத்தி இலக்கணம் காண்பது தொல்காப்பியர் காலத்திலோ வள்ளுவர் காலத்திலோ மரபன்று. பரிமேலழகரே மேற்கொண்டுரைப்பது புது மரபு; பல்லவர் காலத்திற்குப் பின் வந்த இலக்கணப் புலவர் செயல் வகை.

வடமொழி முதலிய மொழிகளின் மரபும், தமிழ் மரபும் வேறு வேறு இயல்பின என உணர்ந்து ஆங்காங்கு அவ் வேற்றுமையை எடுத்துரைத்து மகிழ்விப்பதிலும் பரிமேலழகர் சிறப்புடையவர். தன் உயிரைக் காக்க வேண்டி வருமிடத்து, ஒருவன் மானம் கருதல் ஆகாது என்பது வடநூல் மரபு. ''இன்றியமையாச் சிறப்பின ஆயினும் குன்ற வருப விடல்'' என்று திருக்குறள், வடநூல் மரபுக்கு மாறுபட நிற்பது காண்கிறார் பரிமேலழகர். ஆதலால் ''இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க'' என்ற வடநூல் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும், மானத்தினது நிலை உடைமையையும் தூக்கி, அவை செய்யற்க'' என்பதாம் என உரைக்கின்றார். இவ்வாறே,

''ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.''

என்ற திருக்குறளில் தமிழ்மரபின் தனி இயல்பை விளக்குகின்றார்.

இனி அக்காலத்தில் ஏடும், எழுத்தாணியும் கொண்டு எழுதுவது மரபாகலின், திருக்குறள் உரையின்கண், சில இடங்களில் பரிமேலழகர் முன் எழுதியதை மறந்து தவறுதலும் செய்கின்றார்.

"நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்."

என்பது திருக்குறள். இதற்குத் தாம் ஓர் உரை வகுத்துக் கொண்டு, பிறர் கூறும் உரையை மறுத்து ஒதுக்குகின்றார். பரிமேலழகர் இதற்குப் பிறர் கூறும் உரை, "நாள் என்பது ஒரு பொருள் போலத் தோன்றி உயிரை ஈர்வதொரு வாள்" என்பது. இதன்கண், "நாளென ஒன்று" என்பதற்கு "நாள் என்பது ஒன்று" எனப் பொருள் பிறரால் உரைக்கப்படுகிறது. இவ்விடத்து "என" என்ற சொல் "என்பது" எனப் பொருள்படுகிறது. (1) "என" என்பது ஓர் இடைச்சொல்லேயன்றி பெயர்ச்சொல் அன்று என்பது பரிமேலழகர் கொள்கை. அது (என) "என்பது" எனப் பொருள்படக் கூடாது. (2) ஒன்று போல் காட்டி என்பதற்கு "ஒரு பொருள் போலத் தோன்றி" என்று பொருள் உரைக்கப் பட்டிருக்கிறது. அப்படிச் சொல்வதில் பொருள் சிறப்பு இல்லை என்பது பரிமேலழகர் கொள்கை. "வாளது" என்றவிடத்து "அது" என்பது குற்றியலுகரம் அன்று. ஆகவே, பரிமேலழகர் கருத்துப்படி "அது உணர்வார்" என புனராது முறைப்பட வர வேண்டுமாயின் "அஃதுணர் வார்ப் பெறின்" என வருதல் வேண்டும். அவ்வாறு இல்லாமையால் இதற்கு பிறர் கூறுவது பொருந்தாது என்ற கருத்துப்பட "என" என்பது பெயரன்றி. இடைச்சொல் ஆகலானும், "ஒன்று போற்காட்டி" என்பதற்கு ஒரு பொருட் சிறப்பின்மையாலும், "அது" என்பது குற்றியலுகரம் அன்மையாலும், அஃது உரையன்மை அறிக என்று பரிமேலழகர் மறுக்கின்றார்.

இனி பரிமேலழகர் கருத்தை ஆராய்வோம். "என" என்னும் சொல் இடைச்சொல்லே யன்றி பெயர்ச் சொல் அன்று எனப் பரிமேலழகர் கருதுவது தொல்காப்பியத்திற்கு முரண் ஆனது. 'என' என்னும் இடைச்சொல் பெயர்ப் பொருளிலும் வரும் என்ற கருத்துப்பட "வினையே குறிப்பே இசையே பண்பே, எண்ணே பெயரோடு அவ்வாறு கிளவியும் கண்ணிய நிலத்தே, என என் கிளவி" (தொல். இடை - 10) என்று தொல்காப்பியம் கூறுகிறது. அடுத்து "ஒன்றுபோல் காட்டி" என்பதற்கு ஒரு பொருள் போலக் காட்டி என்றதில் பொருள் சிறப்பில்லை என்கிறார். ஆனால், அவர் இல்லை என்பதற்குத் தக்க காரணம் கூறாமையால் அவர் உரை செல்லாதாகிறது.

மூன்றாவதாக ''வாளது'' என்பதிலுள்ள ''அது'' என்னும் சொல் குற்றியலுகரமன்று எனக் காட்டி மறுப்பது, அவர் பிறிதொரு இடத்தில் உரைத்த உரையையே மறுக்கிறது. அதாவது ''உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன், புண்ண துணர்வார்ப் பெறின்'' என்ற குறட்பாவின் உரையில் ''புண்ண துணர்வார்'' எனப் புணர்ந்ததற்கு, ''அஃது என்னல் வேண்டும் ஆய்தம் விகாரத்தால் தொக்கது'' என உரைத்தார் பரிமேலழகர், அவரே, ''நாளென ஒன்று போல் காட்டி'' என்ற திருக்குறள் உரையில் ''வாளது'' என்ற விடத்து, ''அஃது என்னல் வேண்டும் ஆய்தம் விகாரத்தால் தொக்கது என்று தானே கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்வது உரை முறைமையன்று.

இனி ஓரிடத்தில் எழுவாய் பயனிலையைத் தெளிய நோக்காமல் தடுமாறுகின்றார் பரிமேலழகர்.

"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்."

என்ற திருக்குறட்கு ''மிசைவான்'' என்பது எழுவாயும் ''வேண்டுங் கொலோ'' என்பது பயனிலையும் ஆகும். அதனைத் தெளியாமல் ''இடல் வேண்டும்'' என்பதை எழுவாயும் பயனிலையுமாகக் கொண்டு ''மிசைவான் புலம் வித்தில்லாமலே விளையும்'' எனப் பொய்யுரை புகலுகின்றார். இக்குறட்பாவை உண்மை நெறியில் நின்று நோக்குவோமாயின் விருந்தோம்பி மிக்சில் மிசைபவன் (தன் பால்) உள்ளது வித்தே ஆயினும் விருந்திற்கு இடுவதே தவிர, புலத்திற்கு இடவிரும்பான் என்பது நேரிய பொருளாம்.

இங்ஙனம் ஒரு சில தவறுகள் ஆங்காங்கே காணப்படினும் பழமையிற் புதுமையும், தருக்கத்தில் இலக்கணமும், விளக்கத்திற் சுருக்கமும். நூல் வழக்கொடு உலகியலும் புகுத்தி நுண்மையும் மாண்பும் அழகும் தெளிவும் பரிமேலழகர் உரைக்கென்றமைந்த சிறப்புக்கள் என்பது யாவரும் நினைவிற் கொள்ளத் தக்கது.



# 17. ஆதனார்

சோழன் கரிகாலன், சோழன் கரிகாற் பெருவளத்தான் கரிகால் வளவன் என்றும் கூறப்படுவன். இவனைப் பாடிய சான்றோர்கள். சங்க இலக்கிய முதல் தல புராணங்கள் வரையில் மிகப் பலர் உள்ளனர். கரிகாலன் சங்க இலக்கிய காலத்தவனாதலால், அக் காலத்துச் சான்றோர்களையே இங்கே வரைந்து கொள்வோம்.

சங்க இலக்கியங்களிற் காணப்படும் சான்றோர்களில் சோழன் கரிகாலனைப் பாடியவர் எண்மராவர். அவர்கள், முடத்தாமக் கண்ணியார், கடியலூர் உருத்திரங்கண்ணானார் வெண்ணிக் குயத்தியார், கழாத் தலையார், நக்கீரர், மாமூலனார், பரணர், கருங்குழ லாதனார் என்போ ராவர்.

ஆசிரியர் முடத்தாமக் கண்ணியார் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பொருந ராற்றுப்படை பாடிச் சிறப்பித்துள்ளார். பொருநன் ஒருவன் சோழன் கரிகாலனிடம் சென்று, அவன் தந்த பெருஞ் செல்வத்தைப் பெற்று வருபவன், வேறொரு பொருநன் தன் எதிர் வரக் காண்கின்றான்; அவன் வறுமை மிகுந்து வாடியிருக்கின்றான்; அவனுக்குத் தான் கரிகாலனைக் கண்ட திறமும், கரிகாலன் பிறப்பு வரலாறும், கொடை நலமும், பிறவும் எடுத்தோதி, அவனையும் கரிகாலனிடம் சென்று வேண்டுவன பெற்று வறுமைப் பிணி நீங்குமாறு ஆற்றுப்படுத்துகின்றான்.

இதன்கண் கரிகாலன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியின் மகன் என்றும், இவன் பிறக்கும்போதே தந்தை இறந்ததனால் அரசுரிமையுடன் பிறந்தான் என்றும், இளமை யிலே அரசு கட்டி லேறினா னென்றும் ஆசிரியர் கூறுகின்றார்.

இதனை. '... ... ... வெவ்வேல்
உருவப் பஃறேர் இளையோன் சிறுவன்,
முருகற் சீற்றத்து உருகெழு குருசில்
தாய்வயிற் றிருந்து தாயம் எய்தி

எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பச்
செய்யார் தேஎம் தெருமால் கலிப்ப'

ஆட்சி செய்ய லுற்றான் என்றும், நாடாளுதற் குரிய நலம் பலவும் கரிகாலனுக்குக் கருவிலேயே திருவாய் வாய்த்திருந்தன; அதனால் காலை ஞாயிறுபோல் உலகு புகழும் காட்சியுடைய னானான என்பது தோன்ற,

'பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தான்
னாடு செகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப.'

விளங்கினா னென்றும் வருவனவற்றாற் காணலாம்.

மேலும், கரிகாலன் அரசுகட்டி லேறிய சின்னாட்கெல்லாம் சேர பாண்டியர் இருவரும் துணைவர் பலருடன் கூடிக்கொண்டு, கரிகாலனை வீழ்த்தக் கருதிச், சோழ நாட்டு வெண்ணி யென்னுமிடத்தே போருடற்றினர். அப் போரில் மிக்க இளையனா யிருந்த கரிகாலன், துணை வந்தோர் படை துறந் தோட, பாண்டியன் பருவந்து பின்னிட, சேரன் மார்பில் தைத்த வேல் முதுகு புண் செய்ய, நாணி வாள்வடக்கிருந்து உயிர் துறக்கப், பெருவென்றி யெய்தினான். இது,

'ஆளி நன்மான் அணங்குடைக் குருளை
மீளிமொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டம் களிறட் டாஅங்கு
இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஒங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்.'

என வருவது காண்க.

இனி, கரிகால் வளவனுடைய ஆட்சி நலத்தை முடத்தாமக் கண்ணியார் மிகச் சுருங்கிய சொற்களாற் காட்டுகின்றார்.

'மண்மருங்கினான் மறுவின்றி
ஒருகுடையான் ஒன்று கூறப்
பெரிதாண்ட பெருங்கேண்மை
அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
அன்னோன் வாழி வென்வேற் குருசில்'

*என்பது கரிகாலன் ஆட்சி நலம் காட்டும் குறிப் பாகும்.*

*கரிகாலன், தன்னைப் பாடிப் பாராட்டும் பரிசில ராகிய பாணர், கூத்தர், பொருநர், புலவர் முதலியோர்க்கு வேண்டும் பொன்னும், பொருளும், தேரும், களிறும், ஊரும், நாடும், நல்கி யூக்கினான். இதனைப் பெருவளம் பெற்றுவரும் பொருநன் கூற்றில் வைத்து,*

எரியகைந்த வேடில் தாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரில் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணியக்
கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்
ஊட்டுளை துயல்வர வோரி நுடங்கப்
பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்
காலின் ஏழடிப் பின்சென்று கோலின்
தாறுகளைந் தேறென் றேற்றி வீறுபெறு
பேர்யாழ் முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்
தண்பணை தழீஇய தளரா விருக்கை
நன்பல் லூர நாட்டொடு நன்பல்
வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவரு செலவின் வெகுளி வேழம்
தரவிடைத் தங்கலோ விலனே.

*என்று விரியக் கூறியுள்ளார்.*

*முடிவில் கரிகாலனுடைய காவிரி நாட்டு விளை நலம் கூறி முடிக்கும் முடத்தாமக் கண்ணியார்,*

'கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து
சூடு கோடகப் பிறக்கி நாடொறும்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்கும்

சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே.'

என்று இயம்புகின்றார்.

இவ் வண்ணம் பொருந ராற்றுப்படையால் கரிகால் வளவனைச் சிறப்பிக்கும் முடத்தாமக் கண்ணியார் பெண்பால ரென்று கருதுவோரும் உண்டு, வெறி பாடிய காமக்கண்ணியார் போல, வளைந்து கிடக்கும் தாமத்தை முடத்தாமம் என்று பாடிய நலங் கண்டு சான்றோரால் முடத்தாமக் கண்ணியார் என வழங்கினர் போலும் என்றும் கூறுவர். 'இவர் பெயர் உறுப்பால் வந்த தென்றும், இவர் பெண்பாலா ரென்றும் கூறுவாரும் உளர்' என்பர், திரு.உ.வே.சாமிநாதையர்.

இனி, ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கரிகாலனைப் பட்டினப்பாலை யென்னும் பாட்டைப் பாடிச் சிறப்பித்தவர். இதன்கண், கரிகாலனுடைய மறம் வீங்கு பல் புகழும், அவனுடைய காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பும் விரித்துப் பாராட்டிக் கூறப்படுகின்றன. கரிகாலனை ஒருகால் அவன் பகைவர் ஒரு சூழ்ச்சியாற் கைப்பற்றிச் சிறை செய்து திண்ணிய காப்பும் காவலும் அமைத்திருந்தனர். ஆயினும், அவன், அவர் செய்த சூழ்ச்சியினும் மிக நுண்ணிய சூழ்ச்சி செய்து சிறைக்கோட்டத்தினின்றும் தப்பிச் சென்று, தன்னகரை யடைந்து, அரசுரிமை யெய்தினான் என்பது வரலாறு. இதனை உருத்திரங் கண்ணனார்,

'... ... ...கூருகிர்க்
கொடுவரிக் குருளைக் கூட்டுள் வளர்ந்தாங்குப், பிறர்,
பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி,
அருங்கரை கவியக் குத்திக் குழிகொனறு
பெருங்கை யானை பிடிபுக் கரங்கு
நுண்ணிதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான்.'

என்று குறித்துள்ளார். பின்னர், அவன் தன்னை இவ் வண்ணம் சூழ்ச்சியாற் சிறை செய்த பகைவர் மேற் சென்று, அவருடைய

'உகிருடை யடிய வோங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு
வேறுபல் பூளையோ டுழிஞை சூடிப்
பேய்க்கண் ணன்ன பிளிறுகடி முரசம்
மாக்கண் அகலறை யதிர்வன முழங்க
முனைகெடச் சென்று முன்சம முருக்கி.'

அவருடைய வூர்களைப் பெரும் பாழ் செய்தும் அமையானாய்,

'மலையகழ்க் குவனே கடல்தூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற்றுவ னெனப்'

பெருமறஞ் செருக்கி மேம்பட்டான். அது கண்ட ஒளியர் பணிந்தொடுங்கினர்; அருவாளர் தொழில் புரிந்தொழுகும் தொழும்பராயினர்; வடவர் வாடினர்; குடவர் கூம்பினர்; தென்னவர் திறலழிந்தனர்.

இந் நிலையில் சோழ நாட்டின் இடையிலும் எல்லையிலும் வாழ்ந்த பொதுவரும் இருங்கோவேளிரும் குறும்பு செய்தொழுகினராக, அவர்களை யடக்கி, அவர்கள் இருந்துகொண்டு குறும்பு செய்த காடுகளை அழித்து நாடாக்கி, அந் நாடுகள் வளம் பெறக் குளந் தொட்டு, பகைவர்களால் உறையூர்க் குண்டான கேடுகளைப் போக்கித் திருத்திப், பண்டுபோல் கோயிலும் அரணும் ஏற்படுத்திப், பவைர்க் கஞ்சிச் சென்ற பழங்குடிப் பெருமக்களைக் குடிநிறுத்திப் போர் நேரில் 'பொருவே மல்லது, ஒருவேம்' என்ற சிறப்புரை கிளந்து திகழ்ந்தான், கரிகாலனாகிய செங்கோல் வளவன் என்று இனிது மகிழ்ந்து பாடுவாராய், நம் கண்ணனார்.

'புன்பொதுவர் வழிபொன்ற
இருங்கோவேள் மருங்குசாயக்
காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநீறீஇப்
பொருவேமெனப் பெயர் கொடுத்து
ஒருவேமெனப் புறக்கொடாது

திருநிலைஇய பெருமன்னெயில்
மின்னொளி யெறிப்ப.'

*வீறு பெற்று விளங்கினான் என்று பாடுகின்றார்.*

*இனி, கரிகாலனுடைய காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பைக் கூறுகின்ற கண்ணனார், காவிரி கடலொடு கூடும் கூடலாகிய துறைமுகத்தின்கண்,*

'வைகல்தோறு மசைவின்றி
உல்குசெயக் குறைபடாது
வான்முகந்த நீர்மலைப் பொழியும்,
மலைப்பொழிந்த நீர்கடற் பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி.'

*வேந்தனுடைய புலிப்பொறி பொறிக்கப்பட்டு மலைபோலக் குவிந்து கிடக்கும் என்கின்றார். நகர்க்குள் நுழைவோமாயின், அங்கே,*

'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி.'

*காணுங் கண்ணுக்கு இனிய காட்சி வழங்குகின்றன என்பர். அன்றியும், இந் நகர்க்கண்,*

'வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கல்
சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்'

*காட்சி மலிந்திருக்கிற தென்பர்.*

இங்ஙனம் கரிகாலன் மாண்பும், அவனுடைய காவிரிப்பூம்பட்டினத்துச் சிறப்பும் கவினுற எடுத்தோதும் கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குக் கரிகாலன் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் நல்கினான் எனக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது. கல் வெட்டொன்றும் அதனை வற்புறுத்துகிறது. கடியலூ ரென்பது இவர தூர். உரத்திரன் என்பது இவர் தந்தை பெயர். கண்ணன் என்பது இவரது இயற் பெயர்.

இனி, சேரமான் பெருஞ்சேரலாதனும் பாண்டி வேந்தன் ஒருவனும் வேளிர் பதினொருவரோடு கூடிப் பெரும் படையொடு வந்து, வெண்ணியிடத்தே, பொருது கரிகாலனுக்கு ஆற்றாராய்க் கெட்டபோது, சேரமான் பெருஞ்சேரலாதன் பொருது, புண்பட்டு, மானம்பொறாது, அவ் வெண்ணியிடத்தே வாள் வடக்கிருந்து உயிர் துறந்துபோது, அந் நிகழ்ச்சியை நேரிற் கண்ட சான்றோர் வெண்ணிக் குயத்தியா ராவர். அக் காலத்தே கடலில் அடிக்கும் காற்றைப் பயன்கொண்டு கலஞ் செலுத்தும் விரகினை முதற்கண் கண்டவர் சோழர் என்றும், அச் சோழர் வழிவந்தவன் கரிகாலன் என்றும் புக ழுண்டாகியிருந்தது. கரிகாலனொடு பொருது தோற்ற முடிவேந்தர் இருவருள் பாண்டியன், வெற்றியும் தோல்வியும் ஒருவர்க்கே புரியவல்ல; வென்றி யெய்தினோர் தோற்றலும், தோற்றோர் வெற்றி யெய்துதலும் மாறி வருவது இயல் பென்று தெளிந்து, தன் னாட்டிற்குச் சென்றது போலாது, மார்பிற் புறைத் துருவி முதுகிற் புண்ணுண்டானதற்கு நாணிச் சேரலாதன் தான் தோல்வி பெற்ற போர்க்களத்தின்கண்ணே வாள்வடக்கிருந்து உயிர் துறந்ததும், அது கேட்ட அவனுடைய தானைச் சான்றோர் சிலர் உயிர் துறந்ததும் சிறந்த மற நெறியாகத் தோன்றாமை கண்டார். மறத்தின் நீங்கா மானமாவது தன்னை வென்றோனைக் காலங் கருதியிருந்து, வாய்த்தவுடன் அவனை வென்று விளங்குத லாகும்; இதனை யுணரார்து வடக்கிருந்த சேரலாதன் கரிகாலனைவிடச் சிறந்தவனாதல் இல்லையென அவன் உள்ளந் தெளியுமாறு வற்புறுத்தினார், அதனை,

'நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக!
களியியல் யானைக் கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்த நின்னாற்றல் தோன்ற

வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே.'

என்று பாடியிருத்தல் காண்க.

வெண்ணிக் குயத்தியாருடைய இயற்பெயர் தெரிந்திலது. வெண்ணி யென்பது தஞ்சை மாநாட்டில் (ஜில்லாவில்) உள்ளதோர் ஊர்; இவ் வூரிற்றான் கரிகாலனது வெண்ணிப் போர் நிகழ்ந்தது; இங்கேதான் பெருஞ் சேரலாதன் வாள் வடக்கிருந்தது. பண்டை நாளில் கலஞ் செய்யும் வேட்கோவருட் சிறந்தார்க்கும் குயம் என்னும் சிறப்பினை வேந்தர் நல்கி விளக்கமுறு வித்தனர். அத்தகைய சிறப்புடையவர் இவர் என்பது விளங்கக் குயத்தியார் எனப்படுவா ராயினர். இச் சிறப்புப் பெயரால் இவரது இயற் பெயர் மறைந்து போயிற்று.

இனி, கழாத்தலையார் என்னும் சான்றோர் சேரமான் பெருஞ்சேரலாதன் வாள்வடக்கிருந்து உயிர் துறந்த தறிந்து பெருவருத்தத்தால் கையற்றுத் தன்னை யொத்த வேந்தன் தன் மார்பு குறித்து எறிந்த வேல் புறத்தே ஊடுருவிப் புண் செய்ததற்கு நாணி மறத்தகை மன்னனான பெருஞ்சேரலாதன் வாள் வடக்கிருந்து உயிர் துறந்தான். இனி, எங்கட்கு நாட்கள் அவன் இருந்த நாளிற்போல இனிது கழியா.' என்று புலம்பியுள்ளார். அதனை,

'மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
இருங்கண் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்றம் மறப்ப
உவவுத் தலைவந்த பெருநா ளமையத்து
இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன் ஈங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே.'

என அவர் பாடியிருப்பது காண்க.

கழாத்தலையார் சேர மன்னர்களில் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனையும், பெருஞ்சேரலாதனையும் பாடி யிருத்தலினாலும், ஏனை வேந்தர்களைப் பாடினா ரெனற்கு வேண்டும் இவர் பாட்டுக்கள் தொகை நூல்களுட் காணப் படாமையாலும், இவர் சேர நாட்டின ரெனக் கருதற்கு இடமுண்டாகிறது. கையெழுத்தப் பிரதியொன்றில் இவர் பெயர் கழார்த்தலை யெனக் காணப்படுகிறது. அதுவே உண்மைப் பாட மாயின், இவர் கழார் என்னும் ஊரினராக எண்ணலாம். அக் கழாரும் சேரநாட்டு ஊராதலும் கூடும்.

நக்கீரனார், பரணர், மாமூலனார் ஆகிய மூவரும் சோழன் கரிகாலனை நேர்முகமாக வைத்துப் பாடினா ரில்லை. ஆயினும், அவர்கள் தாந் தாம் அவ்வப்போது பாடிய பாட்டுக்களில் ஒவ்வோரிடத்தில் கரிகாலனைக் குறித்துப் பாடியிருக்கின்றனர். தலைவன் தனக் குரிய வினை குறித்துப் பிரிந்து சென்றானாக, தலைவி அவன் பிரிவாற்றாது உடல் மெலிந்து வருந்துவளோ என அவள் தோழி நினைந்து கவலையுற்றாள்; அது கண்ட தலைவி, தோழி! 'செல்வம் கொணரச் சென்றுள்ள நம் காதலர் வினைகுறித்துப் பிரிவதற்கு யான் வருந்தவில்லை; கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் மறுகு விளக்குறுத்து மாலை நாற்றிச் செய்யும் விழாவுக்கு வந்துவிடுவா'ராயின் நன்று. என்று கூறுகின்றாள். அவள் கூற்றைப் பாடிக்காட்டும் நக்கீரர் கரிகாலனைச் சிறப்பித்து, 'செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால், வெல்போர்ச் சோழன் இடையாற் றன்ன, நல்லிசை வெறுக்கை தருமார்' (அகம். 141) என்று பாடியுள்ளார்.

தலைவன் பரத்தையொடு கூடிப் புனலாடி வந்தானாக, அவனுக்குத் தோழி வாயில்மறுப்பவள், 'நீ பரத்தையொடு புனலாடினாயென்று சொல்லுகின்றனர்; அதனை நீ மறைத்தாலும் ஊரில் உண்டாகிய, அலர் பெரிது.' என்கின்றாள். அவள் கூற்றைப் பாடிக்காட்டும் பரணர், கரிகாலன் வெண்ணிப் பறந்தலையில் சேர பாண்டிய இருவரும் வேளிர் பதினொருவரும் தொலைந்து கெட வென்றதனால், அவனுடைய அழுந்தூரார் வெற்றி விழாக் கொண்டாடி யெடுத்த ஆரவாத்தினும் பெரிது அந்த அலர் (அகம். 246) என்று பாடியுள்ளார். மேலும், பரணர் கரிகாலனுடைய வெண்ணிப்

போர் வென்றியோடு, வாகைப் பறந்தலை யென்னு மிடத்தேயும் கரிகாலன் ஒன்பது வேந்தரைவென்று மேம்பட்டான் என்பாராய்,

'விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
ஒன்பது குடையும் நன்பக' லொழித்த
பீடில் மன்னர் (அகம். 125)

என்று குறித்துள்ளார். ஆகவே, கரிகாலன் வெண்ணிப் பறந்தலையில் ஒரு பெரும் போரும் வாகைப் பறந்தலையில் ஒரு பெரும் போரும் செய்து வெற்றி பெற்றுள்ளான் என்பது பெறப்படும். இதன் கண், 'வெருவரு தானையொடு வேண்டு புலத் திறுத்த, பெருவளக் கரிகால்' என்றதனால், இந்த வாகைப் பறந்தலை பாண்டி நாட்டின் கண்ணதாம்.

பாண்டி நாட்டில் வாகைக் குளம் என்றோர் ஊர் திருநெல்வேலி மாவட்டத்தில் உளது. வாகைக் குளமே வாகைப் பறந்தலையாயின், கரிகாலன் தென் பாண்டி நாட்டின் கிழக்கிலுள்ள வாகைப் பறந்தலையில் பாண்டியனையும் அவற்குத் துணைவந்த குறு நிலமன்னர் எண்மரையும் நண்பகற்போதில் தம் குடை யொழித் தோடுமாறு செய்தான் என்பது துணிபாம். பின்பு அங்கிருந்து மேற்கு நோக்கித் தாமிரபரணிக் கரை வழியே கரிகாலன் சென்றிருத்தல் வேண்டும். மாமூலனார் கரிகாலன் வெண்ணிப்போரில் எறிந்த வேல் சேரலாதன் மார்பிற் பட்டு உருவி முதுகிற் புண் செய்ததற்கு நாணி வடக்கிருந் துயிர் துறந்த போது, சான்றோர் பலர் மேலுலகிற்கு அவனொடு செல்ல விரும்பித் தாமும் உயிர் விட்டனர் என்கின்றார். இதனை,

"... ... ... ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண்ணாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னா வின்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர்
பெரும்பிறி தாகி யாங்கு." (அகம். 55)

என்பது காண்க, இதனால் சேரலாதன் வெண்ணியிலேயே வடக்கிருந்தா னென்பது 'அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென'' என்பது கொண்டு தெளியப் படுகிறது. படவே, வெண்ணிக் குயத்தியார் சேரலாதன் வடக்கிருப்பது கண்டு பாடியது நன்கு வலியுறுகிறது.

இனி, இறுதியாகக் காணப்படுபவர் கருங்குழ லாதனார் என்பவ ராவர். இவர் கரிகாலன் பாண்டியனையும் சேரலாதனை யும் குறு நிலத் தலைவரான வேளிர் பலரையும் வென்று சிறந்து விளங்குவதைப் பாராட்டிப் பாடியுள்ளார். ஆதனால் ஆதன் என்பன தமிழகத்தில் அனைவருக்கும் பொதுவாகப் பயில விளங்கும் பெயராயினும், சேர வேந்தர் பலர் சிறப்பாக அவற்றை மேற்கொண்டிருத்தலால், இவர் சேரர் குடியில் தொடர்பு உடையரெனக் கருதுதற்கும் இடமுண்டு.

கரிகாலன் வாகைப் பறந்தலையில் பாண்டியனையும் வேளிரையும் வென்று தென் பாண்டி நாட்டுள் மேற்றிசை நோக்கிச் செல்லலுற்றானாக, அங்கே அவனை எதிர்த்த பகைவர் ஊர்களெல்லாம் தீக் கிரை யாயின. சென்ற விடமெல்லாம் 'அழு விளிக்கம்பலை' (அழுகுரல்) மிகுவ தாயிற்று. நாட்டில் நற் பொருள் விளைதற்கும் இருத்தற்கும் இடமில்லையாமாறு அழிவுவினை நடைபெற்றது. இவற்றைக்கண்ட ஆதனார் கரிகாலனை யடைந்து அழிவு நிகழாவிடத்து இருக்கும் நாட்டு நிலையையும், நிகழ்வதனால் உண்டாகிய கேட்டையும் அவற்கு உரைத்து, அவன் உள்ளத்தில் அருள் நிலவச் செய்ய வேண்டுமெனக் கருதினார். சோழன் கரிகாலன் புலவர்களை வரவேற்று, அவர் புலமை நலத்தை யோர்ந்து வேண்டும் பரிசி னல்கும் பான்மை யுடையவன். அதனால் அவர் அவனை எளிதிற் காணமுடிந்தது. சோழனைக் கண்டு, 'வளவ, களிறு ஊர்ந்து அவற்றைச் செலுத்துதற்கு ஏற்ப இயன்ற முழந் தாளும், கழ லணிந்து உரிஞப்பட்ட அழகிய திரு வடியும், அம்பு தொடுக்கும் திறனும், இரவலர்க்கு அள்ளி வழங்கும் வளவிய கையும், கண்ணாற் காண்பார்க்கு விளங்கத் தோன்றும் வில்லும், திருமகள் தனக்கே யுரிமை பூண்டு விளங்கும் மார்பும், பெருங் களிற்றையும் பொருது பெயர்க்கும் பெருவன்மையும் கொண்டு விளங்குகின்றாய். நின் உள்ளத்தே சினத்தை யெழுப்பிப் போரில்

ஈடுபடச் செய்யும் பகை வேந்தருடைய நாடு நல்ல நீர் வளம் பொருந்தியது. தண்புனல் பரந்து வந்து வயலிடத்து மடையை உடைக்குமாயின், அந்த உடைப்பை மண்பெய்து அடைத்தால் அடைபடாமை காணும் உழவர் நீரில் மேயும் மீன்களைப் பிடித்து உடைப்பி லிட்டு மண்ணிட்டு அடைப்பர். இத்துணைப் பெரும் பயன் விளைவிக்கும் நாடு, இர வென்றும் பக லென்றும் எண்ணாமல் ஊர்களைத் தீக் கிரை யாக்கி ஊரவர் வாய்விட்டரற்றி யெழுப்பும் அழுவிளிக்கம்பலை மிக்கெழச் சூறையாடுதலை விரும்புகின்றாய்'' என்ற கருத்தமைய,

'களிறுகடைஇயதாள்
கழலுரீஇய திருந்தடிக்
கணைபொருது கவிவண்கையால்
கண்ணொளிர் வரூஉங் கவின் சாபத்து
மாமறுத்த மலர்மார்பின்
தோல்பெயரிய எறுழ்முன்பின்
எல்லையும் இரவும் எண்ணாய், பகைவர்
ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலின் நல்ல
இல்ல ஆகுபவால் இயல்தேர் வளவ!
தண்புனல் பரந்த பூசல்மண் மறுத்து
மீனிற் செறுக்கும் யாணர்ப்
பயன்திகழ் வைப்பிற் பிறர்அகன் றலைநாடே'

என்ற பாட்டைப் பாடினார். கரிகாலன் அவர்க்கு முற்றூட் டாகச் சில ஊர்களும் பொருளும் நல்கினான் என உணர வேண்டியவர்களாக நாம் உள்ளோம். ஏனெனில், கரிகாலன் தன்னைப் பாடி வரும் புலவர், பாணர் பொருநர், முதலியோர்க்கு நல்ல பல வூர்களையும் அவ் வூர்களையுடைய நாடுகளையும் தருபவன் என்பதை முடத்தாமக்கண்ணியார் கூறியிருப்பது காண்க.

பின்னர், சோழன் கரிகாலன் பாண்டி நாட்டினின்றும் நீங்கித், தன் சோழ நாட்டிற்குச் சென்று சில ஆண்டுகள் கழிந்த பின் விண்ணுலகம் சென்றான். இதற்கிடையே ஆதனார்க்கும் கரிகால் வளவனுக்கும் நட்பு மிகுந்தது. அவன் இறந்த செய்தி கேட்ட ஆதனார் சோழநாடு சென்றார். கரிகாலன் இல்லை. அவன்

மகளிரும் தம் இழை முற்றும் களைந்து கூந்தல் களைந்த தலையராய் இருந்தனர். அக் காட்சி ஆதனார்க்கு மிக்க வருத்தத்தைச் செய்தது. அக்காலை அவர் பகைவேந்தர் மதில்களைப் பொருளா எண்ணாது எளிதிற் கடந்து செல்வதும், பாணர் முதலிய இரவலர்க்கு வேண்டுவ நல்கி ஆதரவு செய்வதும், தன் மகளிரொடு கூடி வேள்வி யந்தணர்களைக் கொண்டு வேள்வி பல செய்வதும், ஆகிய இவற்றால் விளையும் பயனை நன்கறிந்த அறிவுடையோன் சோழன் கரிகாலன்.

'அறிந்தோன் மன்றஅறிவுடை யாளன்
இறந்தோன் தானே அளித்திவ் வுலகம்,
அருவி மாறியஞ் சுவரக் கடுகி
பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த வாயத்துப் பயனிரை தருமார்
பூவாட் கோவலர் பூவுட னுதிரக்
கொய்து கட்டழித்த வேங்கையின்
மெல்லியல் மகளிரும் இழைகளைந்தனரே.'(புறம். 224)

என்று பாடி வருந்தினார்.

இவ் வண்ணம் சோழன் கரிகாலன் இறந்த பின்பு அவன் பிரிவாற்றாது கையற்று வருந்திய சான்றோர் வேறு யாவரும் காணப்பட வில்லை. ஆதனார் ஒருவரே காணப்படுகின்றார். இந்த ஆதனார் சங்கத் தொகை நூலிற் காணப்படும் சான்றோருள் ஒருவரான கருங்குழலாதனார் என முன்பே கண்டோம். இவர் இயற் பெயர்க்குமுன் கருங்குழல் என்றொரு தொடர்மொழி நின்று சிறப்பிக்கின்றது. அதற்கும் ஆதனார்க்கும் உள்ள இயைபு ஒன்றும் விளங்கவில்லை.

இருபத்திரண்டு யாண்டுகட்குமுன் பள்ளியூரில் இளம் பூரணர் உரையுடன் புறநானூற்றுக் கையெழுத்துப்படி யொன்றும் என் நண்பர் ஒருவர்பால் இருக்கக்கண்டு அதனையும் புறநானூற்று அச்சுப் பிரதியையும் ஒப்புநோக்கி வேறுபட்ட பாடங்களை யான் குறித்துக் கொண்டது நண்பர் பலரும் அறிந்தது. அக் குறிப்புகளுள் கருங்ழலாதனார் என்பது கருங்குழலாதனார் என்று இருக்கிறது. எங்கேயோ மூலையில் கிடந்த இக் குறிப்பு ஒரு சில நாட்களுக்கு முன்பே கிடைத்தது. கருங்குழலாதனா ரென்பது கருங்குழலாதனார் என்ன

எழுதப்படுதற்கியையுண்டு, இதனை யாராய்தல் வேண்டுமென எண்ணி மேலும் முயலுமிடத்து, கருங்குளம் என்பதோர் ஊரென்பது தெரிந்தது. தென்பாண்டி நாட்டுத் திருநெல்வேலி மாவட்டத்தில் கோட்டைக் கருங்குளம் என்றோர் ஊர் இருக்கிறது. அதனை அவ்வூர்க்கல் வெட்டுக்கள் 'கருங்குள வளநாட்டுக் கருங்குளம்' என்று கூறுகின்றன. ஆகவே, கருங்குளம் என்ற ஊருண்மை தெள்ளிதாயிற்று.

இனிக், கருங்குளத்துக்கும் ஆதனாருக்கும் தொடர் பென்னையென்று காண்டல் வேண்டியதாயிற்று. அவ்வூர்க் கல்வெட்டொன்று அதனைக் 'கருங்குள வளநாட்டுக் கரிகால் சோழ நல்லூரான கருங்குளம் (A.R. No. 269 of 1927-28) என்று குறிக்கிறது. கரிகால் சோழனுக்கும் ஆதனார்க்கும் தொடர் புண்டென்பது அவர் அவனைப் பாடிய பாட்டுக்களால் தெளிவாகிறது. ஆகவே, கருங்குளத்துக்கும் கரிகாற் சோழனைப் பாடிய ஆதனாருக்கும் தொடர்புஉள தாதல் எளிதாம். ஆகவே, கருங்குளவாதனார் காலத்தே அக்கருங்குளம் அவன் பெயரால் கரிகாற் சோழநல்லூராகப் பெயரிடப் பெற்று ஆதனார்க்கு அவனால் முற்றூட்டாக வழங்கப்பட்டிருக்கு மென்பது பொருந்தாதொழியாது. கருங்குளத்துக்கு உரியவராகிய ஆதனார் தென் பாண்டி நாட்டுக் கருங்குளவாதனார் எனப் படுவது இயல்பாம்.

இதனை இறுதியிற் குறிப்பது குறித்தே கரிகாலனது தென் பாண்டி நாட்டு வரவும், ஆங்கு அவனைச் சிறப்பித்துப் பாடிய புலவர்க்கு ஊர் வழங்கியதும் இக் கட்டுரையிடையே வற்புறுத்தப்பட்டன. பாண்டி நாட்டில் கரிகாலனைப் பாடியவர் கருங்குளவாதனார்; அவர்க்கு அவன் அளித்தவூர் கரிகால் சோழ நல்லூரான கருங்குளம். இக் கருங்குளத்திலுள்ள இராச சிம்மேச்சுரத்திற்குத் திருவாங்கூர் மன்னரும் திருப்பணி செய்துள்ளனரென அவ்வூர்க் கல்வெட்டு (A.R. 287 of 1927-28) கூறுவது பற்றி அவ்வூர்க்குச் சேரர் தொடர்பும் உண்டென உணரலாம், என்பது முடிபாம்.



# 18. சமண முனிவர் தமிழ்த் தொண்டு

நம் தமிழ் மொழியின் இலக்கண இலக்கிய நெறியின் வளர்ச்சியினை வரலாற்று முறையால் ஆராய்கின்றவர், இவ்வளர்ச்சி குறித்துச் சமண முனிவர் செய்துள்ள தொண்டு களைக் காணாதுபோக முடியாது. தமிழ் வளர்ச்சிக்கெனச் சிறந்த தொண்டு புரிந்து தமிழ் மக்களைவிடச் சமண முனிவரே தலை சிறந்து நிற்கின்றனர் என்று பலரும் கூறுகின்றனர். அவர் செய்த தொண்டினை ஒரு சிறிது ஆராயின், அவர் தொண்டு முற்றும் தம் சமய நெறியினைத் தமிழ்நாட்டில் நிலைபெறுவித்தற்குச் செய்த சமயத் தொண்டாகவே தோன்றுகின்றமையின், அதனைப் புலப்படுக்கும் குறிப்பால் இக்கட்டுரை எழுதப்பெறுகின்றது.

## க. சமண முனிவர் வரலாறு

சமண முனிவர் என்பவர் சைன சமய வொழுக்கத்தை மேற்கொண்டு, துறவிகளாய், நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் சிறந்து, வினைத்தொடர்பு கெடுமாறு முயலும் சான்றோராவர். இது பண்டைக் காலத்தில் வடநாட்டில் தோன்றிய புதுச் சமயம் என்று சிலர் கூறுவர். சமயக் கலையில் வல்லுனராகிய **இராதாகிருட்டினன்** என்னும் பேராசிரியர், "இஃது இந்திய நாட்டிற்கே உரித்தாகிய வைதிக சமயத்திலிருந்து புதிதாய்க் கிளைத்த சமயம்" என்கின்றார். இச் சமயம் வடநாட்டில் சைன சமயம் என்றும், தென்னாட்டில் சமண சமயம் எனவும் வழங்கப்பட்டது. சைனருள், இல்லறத்தோர் சிராவகர் என்றும், துறவு பூண்டு இன்பத்து விருப்பும், துன்பத்து வெறுப்பும் இலராய் இரண்டனையும் ஒப்ப மதித்தொழுகும் சான்றோர் சமணர் எனவும் கூறப்பவர். இவர்கள், புத்த சமயத்தை நாடெங்கும் பரப்புதற்குரிய பெரு முயற்சியினைச் செய்த பேரரசப் பெருந்தகையாகிய அசோக மன்னராலும் நன்கு மதிக்கப் பெற்றவர்கள். இச் சமணர்கள் நம் தமிழ்நாட்டிற் புகுந்து தம் சமய

நெறியினைப் பரப்பியதனால், இவர்களது சமயமாகிய சைன சமயம் இவர்கள் பெயரால் சமண சமயம் என வழங்கப்படுவதாயிற்று.

## உ. சமண முனிவர் வரவின்கண் தமிழ் இருந்த நிலைமை

தமிழ்நாட்டில், ஆதியில் தமிழ் மக்களே வாழ்ந்து வந்தனர்; அவர்கள்பால் தனித் தமிழே நிலவியிருந்தது. பின்னர், வட நாட்டு மக்கள் தமிழ்நாட்டிற் குடி புகுந்தனர். அவர் வழங்கிய வடமொழியும் அவரோடு போந்து தமிழ்நாட்டில் இடம் பெற்றது. வடவரும் தமிழரும் வாழ்க்கையில் ஒருங்கு இயைந்து உலவத் தொடங்கியதும், வடமொழியும் தமிழிடைக் கலந்து வழங்கப்பெறுவதாயிற்று. சமணர் தமிழ்நாட்டிற் புகுந்த காலத்துத் தமிழரிடை வடவர் வழக்கும், வடமொழி வழக்கும் நிலவியிருந்தன. தமிழ் மக்களின் மனப்பான்மையும், வடவர் வழக்கினையும், வடமொழி வழக்கினையும் மேற்கொண் டொழுகுதற்கண் பேரார்வமும், பேரூக்கமும் கொண்டு இருந்தது.

நம் நாட்டிற்குப் புதியராய், புது வழக்கும், புது வொழுக்கும், புது மொழியும் உடையராய்ப் போந்த மேனாட்டு மக்களின் கூட்டுறவால், நம் நாட்டவர்க்கு அவர் மொழி வழக்கினும், நடையொழுக்கினும் வேட்கையும் விழைவும் பெருக, அதனால் நம் நாட்டு மொழி நிலை தாழ்வுற்றதன்றோ? அங்ஙனமே, வடவர் கொணர்ந்த மொழி வழக்கினையும், நடையொழுக்கினையும் கண்ட தமிழர் அவற்றின்பால் எழுந்த வேட்கைய..ல், தமிழ் வளர்ச்சியிற் கருத்தூன்றாது தாழ்ந்தனர். வடவரது வைதிக சமயக் கோட்பாடுகளை மேற்கொண்டனர். வடவரது வடமொழி உயர்ந்தோர்க்கல்லது உணர்த்தப்படா தென்னும் வடவர் வகுத்த முறையால், இக்காலத்து ஆங்கிலம் போலத் தமிழரிடம் முதலிடம் பெறாதாயிற்று. ஆனால், வடமொழியைத் தமிழொடு விரவிப் பேசும் நெறியினை மட்டும் கைவிடாது பேணிவந்தனர். அதனால், வடசொல் விரவாத தனித் தமிழ் நூல்கள் அருகின; வடசொல் விரவிய நூல்கள் கூடிய அளவிற் பெருகின. இலக்கணங்களும் வட சொற்கள் தமிழொடு

நடைபெற்று இயலுதற்கு இடம் வகுத்து அமைப்பவாயின. ''வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே'' என்று தொல்காப்பியம் கூறுவதாயிற்று.

இவ்வறு வடவர் கூட்டுறவால், தமிழர் தம் தாய்மொழி வளர்ச்சிக்கண் ஊக்கம் குறைந்திருப்பதையும், வடமொழிக்கண் விருப்பும், வைதிக சமயக் கதைகளில் வேட்கையும் மிக்குற்றிருப்பதையும், சமண முனிவர் தெளிய வுணர்ந்தனர். தமிழர், வைதிக சமயப்பற்று மிகுந்து அதுபற்றிய கதைகளைக் கேட்டு, அவற்றிற்கு வேறாக வரும் சமண சமயக் கருத்துக் களையும் கதைகளையும் மேற்கொள்ளுதற்குத் தாழ்த்தனர். இவ்வாறு தம்பால் வேறுபட்டு நிற்கும் தமிழர் கூட்டுறவைப் பெறுதற்குரிய நெறியில் சமண முனிவர் முயல்வாராயினர். தமிழர்க்கு வடநூற் கதைகளில் விருப்பு மிக்கிருந்தமையின், தாமும் வடநூற்களையும், வடநூல் மரபுகளையும் தமிழின்கட் கொணருமுகத்தால் தமிழர் ஆதரவைப் பெறலாயினர். இந் நெறிக்குப் பெருங் கருவியாக விளங்குவது இளஞ் சிறார்க்குக் கல்வி பயிற்றுவிக்கும் பெருந் தொண்டேயாகும் என்று உணர்ந்தனர். அதனால் தாம் தங்கியிருந்த பள்ளிகளில் கூடங்கள் அமைத்து, அவற்றுள் இருந்து சிறுவர்க்குக் கல்விக் கொடை புரியலாயினர். அந்நாள் தொட்டே கல்வி பயிலும் இடங்கள் பள்ளிக்கூடங்கள் என வழங்கப்படுவவாயின.

## ௩. தமிழ்த்தொண்டு

சமண முனிவர்களின் தொண்டு தேவார காலத்துக்கு முன்னையதும், பின்னையதும் என இருவகைப்படும். தேவார காலத்தும், அதற்கு முன்னரும் இருந்த சமண முனிவர் பெருங் கல்வியும், அறம் உரைக்கும் அமைதியும் நிரம்பித் துறவறமே சீரிதாக மேற்கொண்டு இருந்தனர். இவர்கள் நெறியினைத் கடிந்து வாதுபுரிந்த சைவப் பெரியோர்களான ஞானசம்பந்தர் முதலியோர் இவர்களின் பெருங் கல்வியினையும், அறவுரை களையும் சுட்டி இருக்கின்றனர். ''அமணரும் குண்டரும் சாக்கியரும் நயமுக உரையினர்,'' ''ஓதியும் கேட்டும் உணர் வினையிலாதார் உள்கலாகாததோர் இயல்பினையுடையார்'' என்றும், இவர்கள், அறம் உரைத்த பெருமையினை, ''பாடுடைக் குண்டர் சாக்கியர் சமணர் பயில்தரும் அறவுரை'',

''அறங்காட்டும் அமணரும் சாக்கியரும்'', ''கடுமலி உடலுடை அமணரும் கஞ்சியுண் சாக்கியரும், இடும் அறவுரை'' என ஞானசம்பந்தப் பெருமான் கூறியருளியிருக்கின்றார். இவற்றால், தேவார காலத்திற்கு முன்னர் இருந்த சமண முனிவர் தம் சமய அறங்களை மக்களுக்கு உணர்த்துவதே தமது கடனாகக் கொண்டிருந்தனர் என்பது தெளிய விளங்குகிறது. அக்காலத்திற்கு முன்னர் இருந்த தமிழ் நூல்களை நோக்கின், அவற்றுட் சமண முனிவர் செய்தனவாகக் காணப்படுவன யாவும் அறநூல்களே யாக இருக்கின்றன. நாலடியார், அறநெறிச்சாரம், சிறுபஞ்சமூலம் முதலிய பலவும் அறம் கூறுவனவேயாகும்.

அக்காலத்தே அவர்கள், வரலாறு கூறும் தமிழ் இலக்கியங்கள் மிகச் செய்திலர்; ஒன்றிரண்டு செய்தாராயினும் அவை தமிழ் வளங் கெழுமியவாய்த் தமிழர் மனத்தைக் கவ்வுவனவாய் இல்லை. அவர்கள் உலக வாழ்க்கையில் வெறுப்பும், துறவு நெறியில் விருப்பும் மிக்கு இருந்தமையின் தமிழர் வாழ்க்கையில் நிலவிய அகப்பொருள் நலங்களும், புறப்பொருள் துறைகளும் நெடுநாள்காறும் அவர்கள் மனத்தில் இடம்பெற்று, அவர்கள் அறிவை ஏவல்கொள்ளவில்லை. அதனால், அவர்கள் தமிழ் மொழியின் இலக்கணத் துறையிற் புகுந்து, அதன் பகுதிகளுள் ஒன்றாகிய செய்யுளியலில் பெருந்தொண்டு புரிவாராயினர்.

கற்றவர் கல்லாதவர் என்ற இருதிறத்தார்க்கும் அறவுரை வழங்குமிடத்தும் உரையும் பாட்டுமே மிக வேண்டற்பாலன. இவற்றுள் முன்னதைவிடப் பின்னையதே கல்லாதவரையும் எளிதிற் பிணிக்கும் வாய்ப்புடையதாகும். ஆகவே, அதற்குரிய செய்யுளியலில் பெரும்பாடுபட்டுப் பல புதுநெறிகளையும் இயல்களையும் காண்பாராயினர். யாப்பருங்கல விருத்தியுரையிற் காட்டப்பெற்றுள்ள செய்யுளியல் நூல்களுட் பல, சமண முனிவராற் செய்யப் பெற்றிருப்பதற்கு இதுவே காரணமாகும். இசை நூலும் நாடக நூலும் காமம் பயக்கும் சிறுமையுடையவை என்பது அம்முனிவர்களின் கருத்து, அதனால் அத்துறையை நெகிழ்ப்பதோடு அவ்விசை நாடகங்களில் பற்றுண்டாகாமையும் வளர்த்து வந்தனர். தமிழர் தாமும், தம் தமிழையே மறந்து, வடநூற் கதைகளிலும், வடவர் வழக்க வொழுக்கங்களிலும் வேட்கை மீதூர்ந்து நின்றமையின், அவை பேணற்பாடின்றி இறந்தன.

தொல்காப்பிய நூலுட் காணப்படாத பாட்டினங்கள் இவர்கள் செய்த செய்யுளியல்களிற் காணப்படுகின்றன. இவ்வாறு பழைய தமிழ் நெறிகளைப் புதுநெறியிற் கொணர்தற்கு முயன்று பெருந்தொண்டு புரிந்த இப் பெரியோர்கள் இசை, நாடகங்களிலும் தம் கருத்தைச் செலுத்தியிருப்பின், நம் தமிழ் மொழியில் எத்துணையோ இசை நூல்களும் நாடக நூல்களும் தோன்றியிருக்குமே! இசை நூல்களுட் சில இவர்களால் இயற்றப்பட்டன என்று சிலர் கூறுகின்றனர். ஆனால், அதனை உண்மையெனத் துணிதற்குரிய சான்றுகள் கிடைத்தில.

தொடக்கத்தில் தம் சமய நெறிகளை மக்கட்கு உரைப்பதே பொருளாக்கிக் கொண்டு தமிழ்நாடெங்கும் திரிந்து சமண் பள்ளிகளையும், சமண் பாழிகளையும் இவர்கள் நிறுவி வந்தனர். அவை யாவும் அறநிலையங்களாக இருந்தனவேயன்றி, அறிவுச் சுடர் வழங்கும் தமிழ் நூல் நிலையங்களாக இல்லாமையால், தேவாரப் பெரியோர்கள் காலத்தில், இவரது தொண்டு இவர்கட்குப் போதிய அரண் செய்யாதாயிற்று. சமயப்போர் நிகழ்ச்சிகளில், இவர்கட்குப் போதிய படையாகக் கூடிய தமிழ் நூல்கள் இல்லை. அதனால் இவர்கள் எளிதில் வெல்லப் பெற்றனர். தமிழிலக்கணங்களாக, இவர்கள் செய்த அவிநயம், இந்திரகாளீயம், பரிமாணம் முதலியவை சமய நூல்களாகவோ சமய அறநூல்களாகவோ பயன்படவில்லை.

தேவார காலத்தில் இச் சமண முனிவர்களுக் குண்டாகிய தோல்வி இவர்கட்குப் பிற்காலத்தில் அழியாப் புகழைப் பயப்பதாயிற்று. இவர்கட்குத் தம் தொண்டில் இருந்த குறைபாடுகள் நன்கு புலனாயின. தமிழர் கூட்டத்தில் நிலவிய சமய நூல்களைப் பயின்று, அவற்றைப்போல இலக்கியங் களையும், சிறு நூல்களையும் செய்யத் தொடங்கினர். இளஞ் சிறார் முதல் பெரியோர் ஈறாகப் பலர்க்கும் பயன்படத்தக்க தமிழ் நூல்களை இயற்றத் தலைப்பட்டனர். தமிழ்த் தொண்டினைத் தம் சமயத் தொண்டிற்குக் கருவியாகக் கொள்ளும் கருத்தினராகலின், இளைஞர்க்கென இயற்றிய சின்னூல்களிலுந் தம் சமயக் கருத்துகளைப் புகுத்து மிடமறிந்து புகுத்தித் தம் கருத்து முற்ற நினைந்தனர்.

சிறுவர் கற்கும் கணக்கியல் வாய்பாடுகளில், தம் சமயக் கருத்தை நுழைத்தற்கு இடமில்லாமையால், அவற்றிற்குக் காப்புச் செய்யுள் யாத்து, அதன்கண் சமயவுணர்வைப் புகட்டினர்.

''வன்மதிமுக்குடையான்மலரடிதொழ, நெல்லணி லக்கம் நெஞ்சினில் வருமே'' என்பது **நெல்லிலக்கவாய்பாடு.** ''அருகனை அமலனை அசலனையடிதொழ, சிறுகுழி முப்பதும் சிந்தையில் வருமே'' என்பது **சிறுகுழி வாய்பாடு.** இவ்வாறு கல்வி பயின்று வரும் சிறுவர்கட்குத் தமிழ் நூல்களைக் கற்பித்தற்குத் தோற்றுவாயாக நிகண்டுகள் செய்யத் தொடங்கினர். இவர் காலத்துக்கு முன்பிருந்தவை நூற்பா வடிவில் பெருநூல்களாக இருந்தன. அவை, இசையொடு விரவி, புதுப்பாவினத்திற் செய்யப்படின் கற்பார்க்கு ஊக்கம் மிகும் என்று கருதினர். அதனால் அவர்கள் சூடாமணி நிகண்டு முதலிய நூல்களைச் செய்தனர். இதன்கண்ணும் தம் சமயக் கருத்துக்களை வேண்டுமிடங்களிற் காட்டியிருக்கின்றனர். காப்புச் செய்யுள், ''முடிவில் இன்பத்து மூவா முதல்வனைப் போற்றி''ச் செய்தது உலகறிந்தது. பகவன் என்னும் சொல்லுக்குப் பொருள் கூறுமிடத்து, ''பகவனே ஈசன்மாயோன் பங்கயன் **சினனே புத்தன்''** எனத் தொகுத்துரைத்தனர். பன்னிரண்டாவது தொகுதிக்கண், ''சொல்வகை எழுத்தெண்ணெல்லாம் தொல்லைநாள் எல்லையாக, நல்வகையாக்கும் பிண்டி நான்முகன் நாளும் தீமை, வெல்வினை தொடங்கச்செய்து வீடருள்வோன் தாள் போற்றி'' செய்கின்றார். பின்னர், நானிலங்கள், நால்வகையங்கங்களை விரித்துக் கூறலுறுவார், இடையே, சமண் சமயக் கருத்தாகிய நாற்கதி வகையினை நுழைத்து, ''நாற்கதி உம்பர் மக்கள் சொல்லிய விலங்கினோடு நரகர்'' எனக் கூறினர். இவ்வாறே சைவர்கள் கூறும், சிவனுக்குரிய எண்வகைக் குணங்களைக் கூறுமிடத்து, அருகனுக்குரிய எண்வகைக் குணமும், இறைவனுக்கு ஆகாவெனத் தம் சமய நூல்கள் விலக்கிய எண்வகைக் குற்றங்களையும் கூறியிருக்கின்றனர்.

தமிழ்நாட்டில் நிலவிய தொல்காப்பியம் மிக விரிந்து பரந்த நூலாய்க் கிடந்தமையின், அதனைச் சிறுவர்கள் எளிதில் கற்றற்குரிய நிலையில் சின்னூலும் நன்னூலும் இயற்றியிருக்கின்றன. சின்னூல் செய்த **குணவீரபண்டிதர்** என்னும் பெரியார் வடநூன் மரபுகளை ஒரு சிறிதே தழுவி, தம் சமயப் பொருட்குரிய வணக்கங் கூறிச் செல்லுகின்றார். நன்னூல் செய்த **பவணந்தி முனிவர்** சுருங்கிய சிலவாய சொற்களால் மிக அழகியதாக இதனைச் செய்துள்ளார். இதன்கண், இவர் தம் சமயக் கருத்தைக் காப்புச் செய்யுளிற் காட்டியதோடு நில்லாது, எழுத்தின் இலக்கணத்திலும் புகுத்தியிருக்கின்றார். ஆசிரியர்

தொல்காப்பியனார் "எழுத்தெனப்படுப அகரமுதல் னகர விறுவாய் முப்பஃதென்ப" எனத் தொடங்கினரேயன்றி, எழுத்தாவது இஃது என இலக்கணங் கூறிற்றிலர். அவ்விலக்கணங் கூறப்புகுந்த பவணந்தியார், "மொழிமுதற் காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து" என்று மொழிகின்றார். இதன்கண் "அணுத்திரள் ஒலி" என்றது சமண் சமயக் கருத்து. இதனையே எழுத்துக்களின் பிறப்புக் கூறுமிடத்தும், "நிறையுயிர் முயற்சியின் உள்வளி துரப்ப எழும் அணுத்திரள்" எனச் சிறுவர் மனத்தில் நன்குபதியக் கூறியிருக்கின்றார். இத்துறைக் கண் ஆசிரியர் தொல்காப்பியனார், "அகத்தெழு வளியிசை அரில்தப நாடி, அளபிற்கோடல் அந்தணர் மறைத்தே; அஃதிவண்நுவலாது எழுந்து புறத்திசைக்கும், மெய்தெரி வளியிசை அளவு நுவன்றிசினே" என்றே கூறினர். தொல்காப்பியர் கூறியதனையே அவிநயனாரும், குண வீரபண்டிதரும், புத்தமித்திரனாரும் கூறினர். இதனாலும் பிற்காலச் சமண முனிவர்களின் கருத்துத் தம் தமிழ்த் தொண்டு சமயத் தொண்டிற்குக் கருவியாதல் வேண்டும் என்பது தெளிவாகும். இதனையறிந்தே இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகர், "மொழிக் காரணமாம் நாதகாரியவொலி எழுத்து" எனக் கூறினாராதல் வேண்டும்.

இனி, இவர்கள் செய்தருளிய இலக்கியங்கள் சிற்றிலக்கியம், பேரிலக்கியம் என இருவகைப்படும். இவற்றுள், சிற்றிலக்கியங்கள் பலவும் அந்தாதி, கலம்பகம் முதலாகப் பலதிறப்படும். அவை யாவும் சமயப் பொருள்களையும், சமண் சமயச் சான்றோர்களையும் புகழ்ந்து பாடும் சின்னூல்களாகும். திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி முதலியவை சமண் சமயத்தினர் பெரிதும் போற்றிப் படிக்கும் தீவிய செந்தமிழ் நூல்கள். நரிவிருத்தம் போலும் கதைச் செய்யுள் நூல்களும், மேருமந்தர புராணம், யசோதர காவியம் போல்வனவும் சமண் சமயப் பொருள்களையும் வரலாறுகளையும் விளக்கும் நற்றமிழ் நூல்கள்.

சிந்தாமணி முதலாகக் கூறப்படும் பெருங்காப்பியங்களும், சூளாமணி முதலாகக் கூறப்படும் சிறுகாப்பியங்களும் தமிழ் மொழிக்குப் பொதுவாக வைத்துக் கூறப்படுவன. சிறு காப்பியமைந்தனுள், மேலே காட்டிய யசோதர காவியமும் ஒன்றெனக் கூறப்படும்.

சிறுகாப்பியமைந்தும் தமிழ்மொழிக்குரிய பொதுக் காப்பியங்களாகக் கருதப்படும் செந்தமிழ் நலம் சிறந்தவையா

யினும், இவை யாவும் சமண் சமயக் கருத்துக்களையே முற்றும் கூறிச் செல்கின்றன. இவற்றுள் **சூளாமணி** என்பது தலையாயது. இதனை இயற்றிய பெரியார் **தோலாமொழித்தேவர்.** இவர் பெயரும், சீவக சிந்தாமணி செய்த **திருத்தக்கதேவர்** பெயரும் இயற்பெயரல்ல என்று கருதுகிறேன். இவர்களைப்போலத் தமிழ்த் தொண்டு புரிந்த சமண முனிவர் பெயரெல்லாம் வட மொழிப் பெயராகவே இருக்கின்றன. குணவீரபண்டிதர், அமுதசாகரர், மண்டலபுருடர், வாமதேவர் என்பன பலவும் வடமொழிப் பெயர்களே. ஆகவே, இவர்கள் தமிழ் நூல் பயின்று, தமிழ் வேட்கை மிகுந்து, தமிழர்போலத் தாமும் தமிழராகவே இயைந்து நிற்கும் தமிழ் நல மிகுதியால், தம்மைத் தமிழ்ப் பெயரால் திருத்தக்கதேவர், தோலாமொழித்தேவர் என்பவராகக் கூறினாராதல் வேண்டும். இவர்கட்குப் பலவாண்டுகட்குப் பிற்போந்த **கான்ஸ்டான்டினஸ் பெஸ்ச்சி** என்பாரும், தமிழ்த் தொண்டுபுரியும் சால்பு எய்திய வழித் தம்மை **வீரமாமுனிவர்** எனக் கூறிக்கொண்டது, என் கருத்திற்கு ஆதரவு தருகின்றது. இவ் வீரமாமுனிவரும் **தேம்பாவணி** என்னும் காவியமும், **தொன்னூல்** என்னும் இலக்கணமும் பிறவும் செய்து தமிழ்த் தொண்டு புரிந்திருக்கின்றார். **சீவகசிந்தாமணி** யென்பது பெருங்காப்பிய மைந்தனுள் தலையாயது. ஏனை நான்கனுள் சிலப்பதிகாரத்தை இளங்கோவடிகள் என்னும் சைவரும், மணிமேகலையைச் சீத்தலைச் சாத்தனார் என்னும் தமிழரும் எழுதினர். ஏனை இரண்டும் இறந்துவிட்டன. இவற்றுள் மணிமேகலை புத்த சமயக் கருத்துக்களைத் தன்பாற் கொண்டது. சிலப்பதிகாரத்தும் சமண் சமயக் கருத்துக்கள் காணப்படும். ஆயினும் சமயத் தொண்டிற்கும் தமிழ்த் தொண்டிற்கும் ஒத்த இலக்கியமாய் விளங்குவது சீவகசிந்தாமணியே யாகும்.

சூளாமணி, சமண் சமயத்தவரும் ஏனைச் சமயத்தவரும் ஒப்பப்போற்றும் தகுதியுடையதாய் இருக்கிறது. இதனை எழுதிய ஆசிரியர், தமிழ்நாட்டில் நிலவிய புறச்சமயப் பொருள்களையும் சமயப் பொருளையும் கற்று, தம் சமய நூல்களிலும், புறச்சமய நூல்களிலும் ஒத்தவாய் உள்ள கதைப் பகுதிகளைக் கண்டு, அவற்றைத் தமிழ் மக்கட்கு உணர்த்தி அவர் தம் ஆதரவு பெறுவதை நாடிய நல்லறிஞராவர். இதனால், இவர் எழுதிய இந்நூல் இன்றுகாறும் நன்கு போற்றப் பெற்று வருகிறது. சீவகசிந்தாமணியும் இப்பெற்றித்தாய்ச் சைவர் ஒருவரால் உரைகாணவும் பெற்றிருக்கிறது.

